*MADRAS SCHOOL SERIES.*



# THIRD STANDARD READER.

## TAMIL.



## மூன்றும்
## ஸ்டாண்டர்டு புத்தகம்.



*Authorized by the Director of Public Instruction.*

Second Edition, 10,000 Copies.

Madras:

PUBLISHED BY THE EMPRESS OF INDIA PRESS,
*Popham's Broadway, Black Town.*

1896.

*MADRAS SCHOOL SERIES.*



# THIRD STANDARD READER,

## TAMIL.



# மூன்றாம் ஸ்டாண்டர்டு புத்தகம்.



*Authorized by the Director of Public Instruction.*

Second Edition, 10,000 Copies.

Madras:

PUBLISHED BY THE EMPRESS OF INDIA PRESS,
*Popham's Broadway, Black Town.*

1896.



# CONTENTS.









# அட்டவணை.



# மூன்றும் ஸ்டாண்டார்டு புத்தகம்.



## 1. கடவுள் ஒருவர் உண்டென்பது.



1. ஆதியந்த மில்லாமல் சுயம்புவாய் இருக்கிற பராபர வஸ்துவே கடவுள்.

2. எக்காலத்திலும் கடவுளைக் கண்டவர் ஒருவரும் இல்லை. ஒரு பொழுதும் காணப்படாத வஸ்து ஒன்று உண்டென்று நம்பக்கூடுமோ? ஆம், நம்பக்கூடும். சிலவேளைகளில் மரங்களின் கிளைகளும் இலைகளும் அசைகின்றனவல்லவா? அவற்றை அசைப்பது யாது? மரங்களின்மீது அடிக்கும் காற்றல்லவா? காற்றை நாம் பார்க்கக்கூடுமோ? கூடாதாயினும், அதன் செய்கையைக் காண்கிறதினால், காற்றென்னும் ஒருபொருள் உண்டென்று அறிந்துகொள்ளுகிறோம். அது போலவே கடவுளை நாம் காணாவிடினும் சிருஷ்டிப்பொருள்களைக் காண்கிறபடியால் அப்பொருள்களைச் சிருஷ்டித்த கடவுள் ஒருவர் உண்டென்று அறிந்துகொள்ளவேண்டும்.

3. நீ கப்பலேறிப் பெருங்கடலைக் கடந்து, நிர்ஜனமான ஒரு புதிய தீவில்போய்ச் சேர்ந்து, அதில் இறங்கிப் பார்க்கும்

போது ஒரு அழகான வீட்டையும், அந்த வீட்டுக்கு அலங்காரமாய்ப் பற்பல விநோதப்பொருள்களையும், காணுவிதத் தட்டு முட்டுகளையும் வைத்திருக்கக் கண்டால், அங்கு ஒரு மனிதனையுங் காணுவிடினும், அதைக் கட்டி அப்பொருள்களை அமைத்துவைத்தவன் இன்னனென்று உனக்குத்தெரியாமலிருந்தும், அந்த வீடு ஒரு தகுதியான சிற்பியால் அமைக்கப்பட்டதென்று நீ அறிந்துகொள்ளுவாயல்லவா ? அதுபோலவே எல்லாவற்றையும் படைத்த கடவுள் ஒருவர் இருக்கிறார் என்று நாம் அறிந்துகொள்ளவேண்டும்.

4. இந்தப் பூமியானது நமக்கு வேண்டிய சகல வஸ்துக்களும் வைத்திருக்கின்ற ஒரு பெரிய வீடுபோல் இருக்கின்றது. சூரியன் நமக்கு வெளிச்சந்தரும் ஒரு பிரகாசமான சிறந்த விளக்காயிருக்கின்றது. நமக்கு வேண்டிய ஆகாரங்களைக் கொடுப்பதற்கு வயல்களும், மாதுரியமான பழங்களைத் தருவதற்குப் பல விருக்ஷங்களும் இருக்கின்றன. நமக்கு ஜலம் வேண்டுமானால் கொடுப்பதற்கு ஆறுகளும் கிணறுகளும் இருக்கின்றன. நாம் உடுத்துக்கொள்ளும் உடுப்பிற்குப் பருத்திச்செடி பஞ்சையும், பட்டுப்பூச்சி பட்டையும் தருகின்றன. விசாலமான வீடுபோன்ற இப்பூமியில் இல்லாதவஸ்து ஏதாவது உண்டாவென்று நீநினைத்துப்பார். ஒரு அற்பமானவீடும் தானாக அமையாது என்றால் இந்தப் பூமி தானே உண்டாயிருக்குமா? ஒருபொழுதும் உண்டாகாது; அதை உண்டாக்கினவர் ஒருவர் இருக்கவேண்டும்; அவர்தாம் கடவுள்.

## 2. இலாபத்திற்பாதி.

1. கடற்கரைக்கு அதிகதூரமான உள்நாட்டில் ஒரு கோட்டையிலே வாசஞ்செய்துகொண்டிருந்த பிரபு ஒருவர் தன்வீட்டில் நடந்த கலியாணசம்பந்தமாக ஒரு விருந்து செய்யப் பிரயத்தனப்பட்டார். அவ்விருந்துக்கு வேண்டிய



மாமிசம், காய்கறி, பழவர்க்கங்கள் முதலான சகல பதார்த்தங்களும் மிகுதியாகச் சேகரிக்கப்பட்டிருந்தன ; அப்போது சமுத்திரத்தில் அலைக்கிளர்ச்சி அதிகமாக இருந்ததைப்பற்றி மீன்பிடிப்பதற்குக்கூடாமையால் மச்சவகை ஒன்றுமாத்திரம் விருந்திற்குக் குறைவாக விருந்தது.

2. விருந்துநாளின் காலையில் எளிய செம்படவன் ஒருவன் ஒரு பெரிய மீனைப் பிடித்துக்கொண்டு கோட்டைக்குள் வந்தான். உடனே எல்லாரும் அதிக சந்தோஷப்பட்டுக்கூடத்தில் விருந்தினரால் சூழப்பட்டு நிற்கும் பிரபுமுன் அச்செம்

படவனை அழைத்துக்கொண்டு அவன் பிடித்துவந்த மச்சத்தையுங் கொண்டுபோனார்கள்.

3. பிரபு, மீனைப் பார்த்து, "இது வெகு நேர்த்தியாயிருக்கிறது, இதன் விலை யென்ன? நீ என்ன சொன்னாலுங் கொடுக்கிறேன்" என்றார். செம்படவன், "மகாப்பிரபு, ஒருபைசா



டர்பாட் (Turbot.)

வாவது எனக்கு வேண்டாம்; நான் இம்மீனுக்குப்பணம் வாங்கமாட்டேன்; என் முதுகின்மீது நூறு அடி அடிப்பது தான் இதன் விலை; அதில் ஒரு அடி குறைந்தாலும் நான் ஒப்புக்கொள்ளமாட்டேன்" என்றான்.

4. அதைக் கேட்ட அப்பிரபுவும் விருந்தினர்களும் இதென்ன ஆச்சரியமென்று நினைத்து அச்செம்படவனுக்கு என்னசொல்லியும் அவன் கேட்காமல், ஒரேபிடியாக அடி தான் அடிக்க வேண்டுமென்றான். கடைசியாக அப்பிரபு "இம்மனிதனுக்கு இது ஒரு பயித்தியம்போலிருக்கிறது; இதற்கு நாமென்ன செய்யக்கூடும்? நமக்கா மீன் அவசியம் வேண்டியிருக்கிறது, அவன் கேட்கிற விலையை என்கண்முன்

பாகக் கொடுங்கள், அவன் முதுகின்மீது மெதுவாய் அடியுங்கள்" என்றார்.

5. அப்படியே ஐம்பது அடி அடித்தவுடனே செம்படவன், "பொறுங்கள் பொறுங்கள் ; இந்த வியாபாரத்தில் எனக்கொரு பங்காளி இருக்கிறான் ; அவன் பங்கு அவனுக்குச் சேரவேண்டுவது நியாயம்" என்றான். அச்சிமான் "இதென்ன ஆச்சரியம், பூலோகத்தில் இப்படிப்பட்ட பயித்தியக்காரர்கள் இரண்டுபேருண்டா? அவன் எங்கேயிருக்கிறான்? அவன் பேரைச் சொல்லு, நான் அவனை உடனே வருவிக்கிறேன்" என்றார்.

6. அதற்குச் செம்படவன் "அவனுக்காக அதிக தூரம் போகவேண்டுவதில்லை ; அவன் தங்கள் தலைவாயில் காக்கிற சேவகன்தான்; அவனுக்கு இந்த மீனுக்காக எனக்குக்கிடைக்கிறஇலாபத்தில் பாதி தருகிறேன் என்று நான் வாக்குத்தத்தஞ் செய்த பிறகுதான் அவன் என்னை உள்ளே விட்டான்" என்றான். அதைக்கேட்ட பிரபு "ஆ! ஆ! அவனை உடனே கொண்டுவாருங்கள் ; அவன் பங்குக்குண்டான அடியை அதிகபலமாக அடிக்கவேண்டும்," என்றார்.

7. அந்தப்பிரகாரமே அவ்வாயில் காப்போனைப் பிடித்து வந்து அவன் பங்கு இலாபத்தை அவனுக்குக்கொடுதத்துமல்லாமல், அவனை அலுவலினின்றும் நீக்கிவிட்டுச் செம்படவனுக்கு நல்ல வெகுமதி கொடுத்தார்.



## 3. சிங்கம்.

1. சிங்கமானது விசேஷமாய் ஆப்பிரிக்காக்கண்டத்தின் மத்தியதேசங்களிலுள்ள காடுகளில் சஞ்சரிக்கின்றது. அது ஆசியாக்கண்டத்தின் அதிக உஷ்ண தேசங்களாகிய அராபியாவின் மணல் வெளிகளிலும், பாரஸீகத்தில் சில காடுகளிலும், வட இந்தியாவில் மரங்கள் அடர்த்தியாயுள்ள பெருங்காடுகளிலும் ஒன்று இரண்டு உலாவும்.

2. சிங்கத்தின் உருவம் ஆச்சரியமான வீரமும் பெருந்தகைமையும் அமைந்து வலிமையும் விரைவும் சேர்ந்து உருவானதுபோலத் தோன்றுகிறது. மிகுதியும் வளர்ந்த சிங்கம் சுமார் நாலு ஐந்து அடி உயரமும், வாலில்லாமல் எட்டு ஒன்பது அடி நீளமுமாயிருக்கும் ; வால்மாத்திரம் ஏறக்குறைய நாலடி நீளம். சிறுதரமான சிங்கங்கள் நன்றாய் வளர்ந்தால், சுமார் மூன்றரை அடி உயரமும், வாலில்லாமல் ஐந்து அடி

நீளமுமாயிருக்கும்; சிங்கம் சாதாரணமாக மங்கலான கபில வர்ணமுடையது; அதன் கால்கள் தசைப்பிடியும் நரம்பின் பலமுமுடையவை; பாதங்களில் ஒன்றேகால் அங்குலம் நீண்டுவளைந்து கூர்மையாயுள்ள நகங்கள் உண்டு; அந்நகங்களைப் பூனையின் நகங்களைப் போலச் சுருக்கவும் நீட்டவும் கூடும். அதன்செவிகள்சிறுத்து வட்டமாயிருக்கும். அதன்முகத்தில் நீண்ட மீசை யுரோமங்கள் முளைத்திருக்கும். பிடரிரோமம் சிரசிலிருந்து வளர்ந்து கழுத்தின்மீது சாய்ந்து, சற்றேறக்குறைய முழங்கால்வரையும் தொங்கும். அதன் வயிற்றிலும் மார்பிலும் மயிர் நீண்டு வளர்ந்திருக்கும். வாலினுனியில் சடைபற்றிய மயிர்க்குஞ்சம் ஒன்றுண்டு. உடலின் மற்ற இடங்களில் மயிர் குறுகியிருக்கும்.

3. பெண்சிங்கம் ஆண்சிங்கத்திற்கு முக்காற்பங்கு வளர்ச்சியுள்ளது. அதற்குப் பிடரிரோமம் இல்லை. விலாவிலும் வயிற்றிலுமுள்ள ரோமம் சற்று வெளுத்திருக்கும். பம்பாயிக்கு வடமேற்கிலுள்ள கூர்ச்சரநாட்டில் ஒருவகைச் சிங்கம் உண்டு. அவ்வகையில் ஆணுக்காவது பெண்ணுக்காவது பிடரிரோமம் கிடையாது; அதனைப் பிடரிரோமமற்ற சிங்கமென்று சொல்வார்கள்.

4. சிங்கத்திற்கு வலிமை அதிகம்; தன் கையால் ஒரு அறை அறைந்து ஒருகுதிரையின்முதுகை ஒடிக்கவும்அதன் தலையை உடைக்கவும் அதற்கு வலிமையுண்டு; தன் வாலை வீசி ஒரு வலுத்த மனிதனை தரையில் விழுத்தும். அது நடுத்தரமான ஓர் எருதையாவது எருமைக்கடாவையாவது எளிதில் தூக்கிக்கொண்டு வாய்க்கால்களைத் தாண்டியோடும். அதன் தொனியோ பேரொலிபோல் மனிதர்களுக்கும் மற்றெல்லா ஜெந்துக்களுக்கும் பயத்தையுண்டாக்கத்தக்கது. அது பன்னிரண்டு பதினைந்து அடி தூரத்திலுள்ள மிருகத்

தின்மீது ஒரே பாய்ச்சலில் ஒருக்ஷணத்தில் பாயும். அதன் கூரியபற்கள் மாமிசத்தைப் போலவே எலும்பையும் கடித்து நொறுக்கத் தக்க பலத்தோடு கொடிறுகளில் அமைந்திருக் கின்றன. சிங்கம், தன் வலியினாலும் வீரத்தினாலும் இதர மிருகங்கள் அனைத்தையும் கொல்லவல்ல திராணியுள்ளது ; அதைக் கொன்றுதின்னத்தக்க மிருகம் ஒன்றும் இல்லை ; அதனால் அது " மிருகேந்திரன்" என்னப்படுகின்றது.

5. சிங்கம் துஷ்டமிருகங்களில் ஒன்றாயினும், குரூரமுள்ள தன்று. அது பசியினால் அவசியமுண்டானபோது மாத்திரம்தான் மற்றப் பிராணிகளைக் கொல்லும் ; அல்லாமலும் தன் பசியைத் தீர்ப்பதற்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவுதான் பிராணச்சேதம் செய்யும்; பசி தணிந்தபின்பு சாந்தமும் அமைதியுமுள்ளதாயிருக்கும். சிங்கத்தைச் சாதுவாக்கி வளர்க்கக்கூடும். அது பெருந்தகைமை யுள்ள விலங்காதலால், சொற்ப பலமுடைய அற்பப்பிராணிகள் தன்னைத் தொந்தரைசெய்து எதிர்த்தால், அவைகளைப் பொருட்டாய் நினைக்கிறதில்லை. சிங்கமானது மிகுதியும் நன்றியறிதலுள்ள மிருகம்; தனக்கு ஒருவர் செய்த நன்றியை எவ்வளவு காலஞ் சென்றாலும் அது மறப்பதரிது.

6. பெண்சிங்கமானது நாலைந்துமாதம் சூலாகவிருந்து வருஷத்துக்கொருமுறைதான் குட்டிபோடும். ஒவ்வொரு ஈற்றுக்கும் இரண்டுமுதல் நாலுகுட்டிவரையும் போடும்.



## 4. மோஸஸ் ராத்சயில்டு.

1 பிரான்சு தேசத்திலே இராஜகலகமுண்டான ஒரு காலத்தில், ஜெர்மனி தேசத்திலுள்ள மெயின்நதிதீர நகரமாகிய பிரான்குபோர்ட்டில் மோஸஸ் ராத்சயில்டு என்னும் ஒரு யூத சாவகாரியிருந்தான். அவன் மிகுந்த செல்வனல்லாமற்போன போதிலும் யோக்கியனென்றுபேரெடுத்திருந்தான். பிரான்சிய சேனை ஜெர்மனி தேசத்திற் பிரவேசித்தபோது ஹெஸ்ஸிகாஸெல் நாட்டுச் சிற்றரசன் தன் நாடுகளை விட்டு ஓடிவிடும்படி நேரிட்டது.

2. அவன் பிரான்குபோர்ட்டு வழியாகப் போகும்போது, தன்னிடத்திலிருந்த மிகுந்ததிரவியத்தையும்விலையுயர்ந்த சில ஆபரணங்களையும் சத்துருக்கள் அபகரித்துக் கொள்வார்களென்று பயந்து, அவைகளை வைத்துக்கொண்டிருக்கும்படி மோஸஸ் ராத்சயில்டு என்னும் சாவகாரியைக் கேட்டுக் கொண்டான்.

3. அந்த யூதன் அவ்வளவு பொருளை ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை; ஆயினும் அச்சிற்றரசனுக்குத் தன் சொத்துக்களைக் காப்பாற்ற வேறுவகை தோன்றாமையைக் கண்டு, ராத்சயில்டு கடைசியாக அவற்றை ஏற்றுக்கொண்டான். ஏற்றுக்கொண்டும் அப்படிப்பட்ட அபாயமான காலத்தில் அச்சொத்துக்களைக் காப்பாற்றியொப்புவிப்பது நிச்சயமல்லாத காரியமானதனால் அவன் அதற்குப் பற்றுச்சீட்டு மட்டும் கொடுக்கமாட்டேனென்று சொல்லிவிட்டான்.

4. அநேக லக்ஷம் பெறுமான அந்நகை நாணயங்கள் பிரான்குபோர்ட்டுக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டன. பிரான்சியர் அப்பட்டணத்தில் பிரவேசிக்குந்தருணத்தில்ராத்

சயில்டு அவற்றைத் தன் தோட்டத்தில் ஒரு மூலையில் புதைத்துவைத்தான். அறுபதினுயிரம் ரூபாய் பெறும்படியான தன் சொந்தச்சொத்துக்களை மறைத்து வைப்பதற்கு ஒரு பிரயத்தனமும் செய்யவில்லை. பிரான்சியர் அவ்விடம் வந்தபோது அவனிடத்தில் வேறுசொத்துக்களிருக்கிறதாகச் சந்தேகிக்காமலே அவன் சொந்தச் சொத்துக்களைமாத்திரம் எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். அவன் தன்னுடைய சொத்தையும் மறைத்துவிட்டுத் தனக்குச்சொத்தேயில்லையென்றுபாசாங்கு செய்திருப்பானுகில், அவர்கள் வேறநேகவிடங்களிற் செய்தது போலவே தேடிப்பார்த்துச் சொத்துக்கள் முழுவதையும் கண்டு எடுத்துக்கொண்டு போயிருப்பார்களென்பதற்குச் சந்தேகமில்லை.

5. பிரான்சியர் பட்டணத்தைவிட்டு நீங்கினவுடனே ராத்சயில்டு அச்சிற்றரசனுடைய சொத்துக்களைத் தோண்டியெடுத்து, அதிற் சிறிதுபொருளை உபயோகப்படுத்தி, அதனுல் தன் வியாபாரத்தில் அதிக விர்த்தியடைந்து, சிறிது காலத்தில் மிகுதியாய்த் திரவியத்தைச் சம்பாதித்தான்.

6. சிலவருஷங்களில் சண்டை முடிந்து தேசத்தில் சமாதானமுண்டானபோது, ஹெஸ்ஸிகாஸெலுடைய சிற்றரசன் தன்னுட்டிற்கு வந்துசேர்ந்தான். தான் பிரான்குபோர்ட்டுச் சாவகாரியிடத்தில் வைத்துவிட்டுப்போன நகை நாணயங்களைப் பிரான்சியர் அபகரித்துக்கொண்டு போயிருக்கலாம்; அப்படிக்கு அவை அவர்கள் கையிலகப்படாமலிருந்தபோதிலும் அந்தச் சாவகாரி அச்சொத்துக்களையெல்லாந் தன் சுவாதீனஞ்செய்துகொண்டுஅவைகளைப் பிரான்சியர் கொண்டுபோய்விட்டார்கள் என்று சொல்லி மோசஞ்செய்யவுங் கூடும் என்று நினைத்து, அவனிடத்திற் போய்க் கேட்க அச்சப்பட்டான்.

7. ராத்சயில்டோ, சொத்து முழுவதும் பத்திரமாக விருக்கிறதென்றும், பணத்திற்கு நூற்றுக்கு ஐந்து வீதம் வட்டியோடு சொத்துக்களை ஒப்புவிப்பதற்கு ஆயத்தமாயிருக்கிறதாகவும் அச்சிற்றரசனுக்குச் சொன்னதுமல்லாமல், தான் அச்சொத்துக்களைக் காப்பாற்றின விதத்தையும் தெரிவித்து, அவைகளைக்காப்பாற்றும்பொருட்டுத்தன் சொந்தத்திரவியத்தையெல்லாம் இழந்து விட்டதனால், அவன்திரவியத்தில் கொஞ்சம் எடுத்துத் தன் வியாபாரத்திற்கு உபயோகிக்கும்படி நேரிட்டதென்றும் சொல்லி, அதற்காகத் தன்னை மன்னிக்கவேண்டுமென்றுங் கேட்டுக்கொண்டான்.

8. ராத்சயில்டு தன்னிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட அச்சொத்துக்கள் விஷயத்தில் நடந்துகொண்ட உண்மையைப் பற்றி அச்சிற்றரசன் மிகவும் ஆச்சரியப்பட்டு, தன் திரவிய முழுவதையும் அவனிடத்திலேயே வைத்து, மிகவும் சுவல்ப வட்டி வாங்கிவந்தான். பின்னும் அந்த யூதன் செய்த நன்றிக்குப் பிரதியுபகாரமாய் அவன் மிகவும் யோக்கியனென்று யூரோப்புக்கண்டத்திலுள்ள பல அரசர்களுக்குச் சிபாரிசு பண்ணி, அவர்கள் அவனிடத்தில் ரொக்கமாகக் கொடுக்கல் வாங்கல் செய்யும்படி செய்தான்.

9. அதன் மூலமாகக் கடன் வாங்கவேண்டிய பெரியகாரியங்களிலெல்லாம் ராத்சயில்டு சம்பந்தப்பட்டு அதிக லாபமடைந்தான். சில காலத்திற்குள் மோஸஸ் ராத்சயில்டு அதிக திரவிய சம்பன்னனாகி, தன் மூன்று குமாரர்களையும் தான் செய்த வியாபாரத்தையே செய்யும்படிக்கு ஐரோப்பாவிலுள்ள மூன்று முக்கியஸ்தானங்களாகிய லண்டன், பாரிஸ் வியன்னா என்னும் ராஜதானிகளில் நிலைபெறச்செய்தான்.

10. அம்மூன்று குமாரர்களும் விர்த்தியடைந்து, உலகத்தில் எக்காலத்திலாவது தனிமையாகச் சொந்தவியாபாரம் செய்தவர்களில் எவருமே இவர்களுக்கிணையில்லையென்று சொல்லும்படியாகக் கோடீசுவரர்கள் ஆனார்கள். அம்மூவரில், லண்டன் நகரில் வசித்த குமாரன் மரிக்கும்போது ஏழுகோடி ரூபாய் ஸ்திதியுள்ளவனாக விருந்தான். மற்றஇரண்டு குமாரர்களும் அவனைவிடக்குறைந்த செல்வர்களல்லவென்று ஊகிக்கலாம் ; மேலும் அவர்கள் பாரன்என்னும் பிரபுபட்டத்தைப் பெற்றிருந்தார்கள்.

11. இவ்விதமாக இவர்கள் சகாயத்தால் அரசர்கள் யுத்தத்திற் பிரவேசிக்கவும் அதில்லாவிட்டால் அவர்கள்சமாதானத்திற்குட்படவும்செய்யும்படி இக்குடும்பத்தாருக்குவந்தபெருமையெல்லாம் இக்குடும்பத் தலைவனிடத்தில் நம்பி ஒப்புவித்த சொத்துக்களை உலகத்தாரெல்லாரும் ஆச்சரியப்படும்படி உண்மைதவறாமல் மறுபடி கொடுத்துவிட்ட ஒரு நற்செய்கையால் உண்டானவையே யல்லாமல் வேறல்ல.



## 5. யானை.



1. யானைகள் ஆசியா ஆப்பிரிக்காக் கண்டங்களில் இருக்கின்றன. ஆசியாக்கண்டத்தில் இந்துதேசத்திலும் சிலபெரிய தீவுகளிலும் அவை சஞ்சரிப்பதன்றியும் சீனா, ஆவா, கொச்சின் சீனாவிலும் உண்டு. இந்துதேசத்திலே பங்காளத்தின் தென்கிழ்ப்பாகத்திலுள்ள குளிர்ச்சியான காடுகளில் விசேஷமாய்ச் சஞ்சரித்தபோதிலும், அவைகள் மேற்குக் கணவாய்

களிலும் சில விடங்களிலுண்டு. ஆப்பிரிக்காவில் செழிப்புள்ள வெளிகளிலும், காப்பிரேரியா நாட்டிலுள்ள ஆற்றோரங்களிலும் அவை கூட்டங்கூட்டமாக விருக்கின்றன.



2. நிலத்தில் சஞ்சரிக்கும் மிருகங்களுக்குள் மிகப் பெரியது யானை. அவற்றுள் அதிக பெரியது பதினொன்கடி உயரமுடையது. ஆயினும் அந்தந்தத் தேசத்து யானைகள் வெவ்வேறு பரிமாணமுடையனவாயிருக்கின்றன. சில தேசத்து யானைகள் ஏழடி உயரத்துக்கதிகம் வளருகிறதில்லை. சாதாரணமாக யானை பார்ப்பதற்குலக்ஷண முடையதன்று. அதன்

முகம் வேறெந்த மிருகங்களின் முகத்தையும் போலில்லாமல் புறப்பாகம் நீண்டிருக்கும்; அதற்குத் தும்பிக்கையென்று பெயர். அத்தும்பிக்கையின் முனையில் நாலைந்து அங்குல நீளமுள்ள விரல்போன்ற அவயவ மொன்றிருக்கின்றது. தும்பிக்கையின் இருபுறத்திலும் சிறிது மஞ்சள் நிறமான பெரிய பல் அல்லது தந்தம் வாயினின்று முளைத்து வளர்ந்திருக்கும். இந்தத் தந்தம், நன்ருய் வளர்ந்த பெரிய யானைகளில் ஆறடி நீளத்திற் கதிகமாக இருக்கும். பிடியானைகளுக்குச் சாதாரணமாகத் தந்தங்கள் முளையா; முளைத்தபோதிலும் அவை மிகச் சிறியவையாயிருக்கும். யானை சாதாரணமாகக் கறுப்பு நிறமுடையதாக விருக்கும். இந்துதேசத்தில் பல வருஷங்களுக்கு முன் வெள்ளை யானைகளும் இருந்ததாகத் தெரிய வருகிறது. ஆயினும் வெள்ளை யானைகள் அதிக அருமை. அவைகளை இந்துதேசத்தார் அதிகப் பெருமைப்படுத்துகிருர்கள்.

3. யானை சாந்தமுள்ள ஜெந்து. அது கோபம் மூட்டப்பட்டாலல்லாமல் ஒருவருக்கும் தீங்கு செய்கிறதில்லை. ஆயினும் யாராவது தீங்குசெய்தால் அதை மனதில் வைத்திருக்குமாதலால் அதன் ஜோலிக்குப் போகாமலிருப்பது நல்லது. அதற்குப் பலம் அதிகம்; அது அடியெடுத்துவைக்கும்போது பூமிஅதிரும்; அதுதன் தும்பிக்கையினுல் மரங்களை வேரோடு பிடுங்கியெறியும்; சுவர்களைத் தாக்கி விழச்செய்யும்.

4. யானை மிகவும் எளிதில் சாதுவாக்கப்படும். சாதுவாக்கப்பட்டால் அறிவும் பக்ஷமும் கீழ்ப்படிதலும் உள்ளதாயிருக்கும். அது தனக்கு இரைபோட்டுப் பராமரிக்கிற பாகனிடத்தில் அதிக பக்ஷமாயிருப்பதுமன்றி, சீக்கிரத்தில் அவன் சைகைகளைத் தெரிந்துகொண்டு, அவன் கோபித்துக்கொள்

ளுகிறனென்றும், கட்டளையிடுகிறனென்றும், சந்தோஷப்படுகிறனென்றும் அறிந்துகொள்ளுகின்றது. யானைக்கு நல்ல ஞாபகம் உண்டு. ஒருவர் தனக்குச் செய்த நன்மையையாவது தீமையையாவது அது மறக்கிறதில்லை.

5. யானைகள், மரங்களும் புதர்களும் அடர்ந்திருக்கின்ற வனங்களிலும் காடுகளிலும் சஞ்சரிக்கும். அவை சாதாரணமாகத் தனித்திருக்கிறதில்லை. தூரமான இடங்களுக்குப் பிரயாணம் போகும்போது, அவை பெருங்கூட்டங்களாகக் கூடி, நடுவயதாயுள்ளவை கடையிலும், குட்டிகளும் பலமற்றவையும் இடையிலும், வயதிலும் அனுபவத்திலும் முதிர்ந்தவை முன்னுமாகப் போகும்.

6. யானை சாகபக்ஷணி. அது புல், பூண்டு, கிழங்கு, கரும்பு, மரத்தின் இளங்கொம்பு, பழம், தானியம் இவை முதலியவைகளைத் தின்னும். மாமிசத்தையாவது மச்சத்தையாவது தொடாது. ஆகாரம் தின்பதிலும் ஜலபானஞ்செய்வதிலும் துதிக்கையை உபயோகப்படுத்தும்.

7. பிடியானை இரண்டுமூன்று வருஷத்திற்கொருமுறை குட்டிபோடும். ஈற்றுக்கு ஒரு குட்டிக்கதிகம் போடாது. ஈன்றவுடனே யானைக்குட்டி இளங்கன்றைப்பார்க்கிலும் அதிகப் பெரிதாயிராது ; சரியான அளவாக வளர இருபது முப்பது வருஷம் செல்லும். யானை அதிக நாள் ஜீவித்திருக்கும். மனிதர்களால் வளர்க்கப்பட்ட யானைகள் நூற்றுமுப்பது வருஷம் ஜீவித்திருந்ததுண்டு. காட்டில் யதேச்சையாய்த் திரியும் யானைகள் இருநூறு வருஷத்திற்குமேல் ஜீவித்திருப்பதாகச் சொல்லுகிறார்கள்.

8. யானை பலவிதத்திலும் உபயோகமுள்ளதாயிருக்கிறது. ஆப்பிரிக்காக்கண்டத்திலும் கீழ் இந்தியதேசங்களிலும் பல

இடங்களில் பெரும்பாலும் சுமையெடுப்பதுயானையே. பீரங்கி முதலிய யுத்த உபகரணங்கள் கண்டறியப்படுமுன், பல தேசத்தார்கள் யானைகளை யுத்தத்தில் உபயோகித்தார்கள். இந்துதேசத்தில் இப்பொழுதும் பீரங்கிவண்டிகளை மலைகளின் மீது இழுத்துக்கொண்டு போவதற்கும், கூடாரம் முதலான யுத்த தளவாடங்களை முதுகின்மேற் சுமந்துகொண்டு போவதற்கும், யானைகள் உபயோகப்படுகின்றன. இந்துதேசத்தில் நெடுங்காலமாக யானைகள் பெரிய வேட்டைகளில் உபயோகப்பட்டுவருகின்றன. இந்துராஜாக்கள் அவைகளைப் பெருமைக்காகவும் அலங்காரத்திற்காகவும் வைத்திருக்கிறார்கள்.



## 6. ஊர்வன.



1. வயிற்றினால் ஊர்ந்தாவது குறுகியகால்களினால் நகர்ந்தாவது உலாவும் ஜெந்துக்களுக்கு ஊர்வன அல்லது ஊரும் ஜெந்துக்களென்று பெயர். இக்காரணத்தினாலேதான் நாலு கால்களால் நகரும் தவளை பல்லிகளும், கால்களேயின்றி வயிற்றினால் ஊரும் பாம்பினங்களும் ஊர்வனவென்றே சொல்லப்படும். முதலை, பல்லி, ஓணான், உடும்பு, ஆமை, பாம்பு, தவளை, தேரை ஆகிய இவைகள் இவ்வகுப்பைச் சேர்ந்தவை. ஊரும் ஜெந்துக்களுடைய இரத்தம்குளிர்ந்திருக்கும். அவற்றிற் சில நிலத்தின்மீதேவாழும்; சில ஜலத்தில்சஞ்சரிக்கும் ; வேறு சில நிலத்திலும் நீரிலும் வாசம்பண்ணும். மனிதர்களுக்கும் மிருகங்களுக்குமிருப்பதுபோல ஊரும்ஜெந்துக்களுக்குத் தேகத்தில் உரோமமும் முலைக்காம்புங் கிடையா ; பக்ஷிகளுக்கிருப்பதுபோல இறகுகளுமில்லை ; மிருகங்களுக்கிருப்பதுபோல ஒருவிதக் கால்களும் வாலுமிருப்பதால், அவற்றை மச்சங்களோடு சேர்ப்பதற்குங்கூடவில்லை. ஊரும்

ஜெந்துக்களில் அநேகம், வருஷத்திற்கு ஒருமுறை தங்கள் தோல்களை உரித்துவிடும். இவைகளில் மிகுதியானவைவேறு ஜெந்துக்களைத் தின்றுஜீவிக்கும். சில, ஆமையைப்போலக் கடற்பூண்டுகளைத் தின்னும். ஊரும் ஜெந்துக்களில் ஒன்ருவது ஆகாரத்தை மென்று தின்கிறதில்லை; அவை அவ்வாகாரங்களை முழுதாக விழுங்கிவிடும்.

2. ஒன்றிரண்டுதவிர ஊர்வனயாவும் முட்டையிட்டுக்குஞ்சுபொரிக்கும். தாய்ஜெந்துக்களால்தகுந்த இடங்களில் இடப்பட்ட அம்முட்டைகள் சூரியவெப்பத்தினுல் பொரியும்.



முதலை.

3. முதலை முசலியினத்தில் மிகப்பெரியது. அது ஆசியா, ஆப்பிரிக்கா, அமெரிக்காக்கண்டங்களின் உஷ்ணபாகங்களிற்பாயும் பெருநதிகளிற் சஞ்சரிக்கும். அது ஒரு பிரமாண்

டமான உடும்பைப்போல் இருக்கும். ஒவ்வொன்று இருபத்தைந்து அடிநீளம் வளரும். அதன் முதுகில் துப்பாக்கிக்குண்டுக்கும் அசையாத செதிள்கள் உண்டு. பல்லி, ஓணான், பச்சோந்தி, உடும்பு இவை இவ்வினத்தைச் சேர்ந்தவை.



மலைப்பாம்பு.

4. ஊரும் ஜெந்துக்களெல்லாவற்றிலும் மலைப்பாம்பு மிகப்பெரியதும் வலிமையுடையதுமாக விருக்கும். மலைப்பாம்புகளில் சில முப்பது முப்பத்தைந்து அடிநீளமுள்ளன. சில

மான் பசு முதலான வலிமையுள்ள பெரிய ஜெந்துக்களை யுங் கொல்லத்தக்க அவ்வளவு மிகுதியானபலத்தையுடையன. அவை அப்பெரு மிருகங்களைச் சுற்றிக்கொண்டு இறுக்கிக்கொன்று, உமிழ்நீரினால் நனைத்துச் சாவகாசமாக விழுங்கும். இம்மாசுணம் பாம்பினத்தைச் சேர்ந்தது. சில பாம்புகளுக்கு விஷமுண்டு; அவை அவ்விஷத்தைத் தங்கள் பற்களினால் கடித்து உண்டாகும் காயத்தின் வழியாகச் செலுத்தும்.



நாகப்பாம்பு.

5. நாகப்பாம்பு விஷப்பாம்புகளில் மிகக் கொடியது.

6. தேரைகற்பாறையினடுவிலும் மரத்தின் வயிரத்துக்குள்ளும் உயிரோடிருக்கக் கண்டிருக்கிறார்கள்.

## 7. மேகமும் மழையும்.

1. ஒரு கற்றரையில் சிறிது நீர் தெளித்தால் அந்த நீர் கொஞ்சநேரத்தில் மறைந்துபோய்த் தரை காய்ந்துவிடுகிறது. அந்த நீர்எங்கே போகிறது? கல்லுக்குள்சென்றிருக்கமாட்டாதே; அது கண்களுக்குப் புலப்படாத ஆவிரூபமடைந்து, வறண்டிருக்கும் சாதாரண வாயுவினால் கவரப்படுகிறது. இவ்



வேறுபாட்டிற்கு காரணம் உஷ்ணமே. சாதாரண வாயுவானது எவ்வளவு அதிக வெப்பமாக இருக்கிறதோ அவ்வளவு மிகுதியாக அது நீராவியைக் கிரகித்துத் தன்னுள் அடக்கிக் கொள்ளும்.

2. ஒரு பாத்திரத்தில் ஜலத்தைவிட்டு அடுப்பில் வைத்துக் காய்ச்சினல் அந்த ஜலம் காயக்காயக் குறைந்துபோகிறதல்லவா? அந்த ஜலம் எங்கேசெல்லுகிறது? அது, உஷ்ணத்தால் ஆவியினுருவைப் பெற்றுச் சாதாரணவாயுவில் கலந்துபோகிறது. ஒரு வாயகன்ற பாத்திரத்தில் ஜலத்தைவிட்டு வெயிலில் வைத்தால் ஜலமானது படிப்படியாய்க் குறைந்து, கடைசியில் முழுவதும் வற்றிப்போகிறது. இதற்குக் காரணமென்ன? சூரியவெப்பத்தினல் அச்சலம் ஆவிரூபமாகப் பரிணமித்துச் சாதாரணவாயுவிற் கலக்கிறதேயாம். இந்த ஆவி சாதாரணவாயுவைக்காட்டிலும் இலேசானபடியினலே, எண்ணெய் நீரில் மேலே எழுவதுபோல, அந்த வாயுவில் ஆவி மேலே எழுகின்றது. இக்காரணத்தினலேயே, சமுத்திரங்களிலும் தடாகங்களிலும் உள்ள ஜலமானது பகற்காலத்தில் சூரிய வெப்பத்தினல் ஓயாமல் ஆவியாகப் பரிணமித்து ஆகாயத்தில் எழும்பிக்கொண்டேயிருக்கும்; இதுசூரியவெப்பம் மிகுதியாயுள்ள அயனவரைகளுக்குட்பட்ட உஷ்ணப்பிரதேசங்களில் மிகுதியாக நடக்கிறது. பூமியின்மீதுள்ள சமுத்திரங்களிலிருந்து நாள்தோறும் சுமார் 450 கோடி இராத்தல் நிறையுள்ள ஜலம் சூரியவெப்பத்தினலே ஆவியாக்கப்படுகிறதென்று மதிக்கப்படுகிறது.

3. ஆவியாகப் பரிணமிக்கும் ஜலம் அதிநுட்பமானபடியால் கண்ணுக்குத் தோன்றுவதில்லை. ஜலத்தில் உப்புக் கரைந்து கண்ணுக்குத் தோன்றமல் மறைந்திருப்பதுபோல், நீராவியின் அணுக்கள் சாதாரணவாயுவோடு கலந்து கண்ணுக்குத் தோன்றமல் இருக்கின்றன.

4. மேற்கண்டபடி ஆகாயத்தில் எழும்பும் நீராவியின் அணுக்கள் எக்காரணத்தினலாவது சிறிது குளிரப்பெற்றல், அவைசேர்ந்துதிரண்டு ஆகாயத்தில் கண்ணிற்குத்தோன்றும்

உருவத்தை அடைகின்றன. இந்நீராவித் திரளுக்கு மேக மென்று பேர். காகிதத்துண்டுகள், இறகுகள் முதலானவை இளங்காற்றினால் ஆகாயத்தில் பறப்பதுபோல், மேகங்களும் பெரும்பாலும் காற்றினால் சஞ்சரிக்கின்றன. அதனாலேதான் சாதாரணமாகக் காற்று நின்றபிறகு மழைபெய்கிறது. மேகங்கள் காற்றால் இங்குமங்கும் கொண்டுபோகப்படுகின்றன. அவை சாதாரணமாய்ப் பூமியினின்று சுமார் இரண்டு மூன்று மைல் உயரத்தில் சஞ்சரிக்கின்றன.

5. உலைப்பானையின்மேல் ஒரு சட்டியைக் கவிழ்த்துவைத்தால், அந்தப் பானையிலுள்ள ஜலமானது உஷ்ணத்தால் ஆவியாகி எழும்பி, மூடியிருக்கிற சட்டியின் உட்புறத்திலே போய்ப் படியும், அந்தச்சட்டியையெடுத்துக்குளிர்ந்த காற்று முகமாகச் சாய்த்தால், அதில் அடைந்திருந்த ஆவியானது மறுபடி நீராகமாறித் துளித்துளியாகச் சொட்டும். அதுபோலவே நீராவியைக் கொண்டிருக்கிற மேகங்களின்மீது குளிர் காற்றுப்பட்டால், அந்த ஆவி ஜலமாக மாறும். அந்த ஜலமானது சாதாரணவாயுவைவிட கனமானபடியால் துளித்துளியாகப் பூமியின்மீது விழும் ; இதுதான் மழை என்னப்படும்.

6. மழை பூமியின்மேல் எல்லா இடங்களிலும் ஒரே அளவாகப் பெய்கிறதில்லை. ஆப்பிரிக்காக்கண்டத்திலுள்ள பெரிய வனத்தின் சில பாகங்களைப்போன்ற சிறிது இடங்களிலும் அமெரிக்காவில் பெருதேசத்திலும் மழை பெய்வதேயில்லை ; சில இடங்களிலும் மிகக் கொஞ்சமாகப் பெய்யும் ; மற்றுஞ் சில இடங்களில் எப்போதும் பெய்கிறது. வருஷமுழுவதும் இங்கிலாந்து தேசத்தில் சற்றேறக்குறைய 30 அங்குலமும், மூல்தானில் 2 அங்குலமும், சென்னபட்டணத்தில் 50 அங்குலமும், மேல்சமுத்திரக் கரையிலுள்ள மலையாள தீரத்தில் சற்றேறக்குறைய 180 அங்குலமும், பம்பாய்க்குத் தென் கிழக்கிலிருக்கும் மகா பலேசுவரத்தில் 290 அங்குலமும், வங்

காளத்துக்கு வடகிழக்கிலுள்ள காசியமலையின்மீது சரபுஞ்சி என்னுமிடத்தில் 524 அங்குலமும் பெய்கிறது ; தெரிந்தவரையில், சரபுஞ்சியில் பெய்கிறதற்கதிகமாகப் பூமியின்மீது எங்கும் பெய்கிறதில்லை. காற்றினால் மேகங்கள் அங்குமிங்கும் கொண்டுபோகப்படும்போது, அவை உயரமாக இருக்கும் மலைகளினால் தடுக்கப்பட்டு, அம்மலைகளில் தங்குகின்றன. அதினால் தான் மழை மலைகள்மேல் பெய்கிற அளவு தாழ்ந்த பூமியின்மீது பெய்கிறதில்லை. ஒரு வருஷத்தில் பூமியின் மீது பல இடங்களிலும் பெய்யுமழை இலக்ஷம் கனமயில் அடங்கிய ஒரு தடாகத்தை நிரப்பக்கூடியதாக இருக்குமென்று மதிக்கப்பட்டிருக்கிறது.

7. இவ்வளவு மழைநீரும் எங்கே போகிறது? மலைகளின் மீதும் பள்ளத்தாக்கு நிலங்களிலும் விழும் மழைநீர், அருவிகளாகவும் சிற்றாறுகளாகவும் ஓடி, ஒன்றோடொன்று கலந்து பெரிய நதிகளாகப் பெருகி, சமுத்திரங்களிலும் பெரிய தடாகங்களிலும் போய்ப் பாய்கின்றது. அம்மழைநீரிற் சிறிது பூமிக்குள் சுவறியும் சிறு ஏரிகளில் தங்கி அங்கிருந்து பாய்ந்தும் பயிர், செடி, மரங்கள் முதலானவைகளை வளர்க்கின்றது. நதிகளாகப் பாய்ந்து பெரிய தடாகங்களிலும் சமுத்திரங்களிலும் போய் விழும் ஜலமானது, மீண்டும் சூரியவெப்பத்தினாலே ஆவியாகப் பரிணமித்து, சாதாரணவாயுவிற் கலந்து மேகரூபமடைந்து, மறுபடி மழையாகப் பூமியின்மீது விழுகின்றது.

## 8. நியூவெளந்துலாந்திய நாய்.

1. இங்கிலாந்தின் தென்கிழக்கில் கெந்து என்னும் ஒரு மாகாணம் இருக்கின்றது. அங்கொரு முறை பெருங்காற்று அடித்தபொழுது அந்த மாகாணத்தைச்சேர்ந்த லித்து என்

னுங் கிராமத்தின் சமுத்திரதீரத்தில் ஒருமரக்கலம் காற்றினுல் கரை தட்டிற்று. அதில் இருந்த கப்பற்காரர் எட்டுப் பெயர். அவர்கள் தங்களைத் தப்புவிக்கும்படிக் கரையில் நின்றவர்களைக் கூவி அழைத்தார்கள். சமுத்திரத்தின் அலைகள் கோஷித்துக்கொண்டு புரண்டு கொந்தளித்தபடியால், அவர்களிருந்த இடத்திற்குப் படவு செலுத்திக்கொண்டுபோவது அசாத்தியமாயிருந்தது. கடைசியில் ஒருவர் தாம் வளர்த்த நியூவௌண்துலாந்திய நாய் ஒன்றை அழைத்துக்கொண்டு கடலோரம் வந்து, அதற்கு மரக்கலத்தைக் காண்பித்து, அதின் வாயில் ஒரு சிறுகோலைக் கொடுத்தார். அந்த அறிவுள்ள



நாய் அவருடைய கருத்தை அறிந்து கோலைக் கௌவிக்கொண்டு, மலைபோலப் புரண்டு எழுந்த அலைகளுக்குச் சிறிதும் பயப்படாமல் துரிதமாய்ப் பாய்ந்து அவைகளைத் தாண்டிக் கப்பலுக்குச் சமீபத்திற் போய்ச் சேர்ந்தது. கப்பற்காரர் அதைக் கண்டு பயம் நீங்கிச் சந்தோஷமுள்ளவர்களாய், வேறொரு கோலில் கயிற்றைக்கட்டி அதை அந்நாயினிடத்தில் எறிந்து, கயிற்றின் மறுமுனையைத் தாங்கள்பிடித்துக்கொண்டார்கள். உடனே விவேகமுள்ள அந்நாய் அவர்கள் கருத்து

முழுமையும் அறிந்து, தன் வாயில் இருந்த கோலை வழுவ விட்டு, எறியப்பட்ட கோலைக் கௌவிக்கொண்டு, அதிக வீரமும் விரைவுமுள்ளதாய், அலைகளைத் தாண்டிக் கரைசேர்ந்து தன் எஜமானனிடத்திற் கோலைக் கொடுத்தது. அப்பொழுது கரையில் நின்றவர்கள கயிற்றைப் பிடித்து, அதின் வழியாய் மரக்கலக்காரர்களெல்லோரையும் கரையேற்றினார்கள்.

2. கபால லக்ஷண வித்தையில் பாண்டித்தியமுள்ளவர்கள் பருத்த மூளையுடையவர்களுக்கு விவேகம் அதிகப்பட்டிருக்குமென்று சொல்கிறார்கள். நாய்களின் குணகுணங்களைக் குறித்து நன்றாய்ப் பரீக்ஷித்து அறிந்த ஒருவர், அவ்வாறே பருத்த தலையுள்ள நாய்கள் மற்ற நாய்களைப்பார்க்கிலும் பெரும்பாலும் இயற்கையறிவில் விசேஷித்திருக்குமென்று சொல்லியிருக்கிறார். அவரிடத்தில் ஒருநாய் இருந்தது; அதன் தலை சாதாரண நாய்களின் தலையைப்பார்க்கிலும் அதிகமாய்ப் பருத்திருந்தது. அதைப்போல் அவ்வளவு அறிவுள்ள நாய்களைக்காண்பது அரிது; அது நியூவௌந்துலாந்திய நாய்க்கும் வேறொரு ஜாதி நாய்க்கும் பிறந்தது. அது வெளியே வேட்டையாடுவதில் மிகுந்த சாமர்த்தியமுள்ளதாயிருந்ததுமல்லாமல், வீட்டிலும் பல வேலைகளுக்கு உபயோகமுள்ளதாயிருந்தது. அதின் மூலமாய்க் கடிதப் போக்குவரவு செய்யப்பட்டது. அயலாருக்கு ஏதாவது சங்கதி தெரியப்படுத்த வேண்டுமானால், அந்த நாய் கடிதங்கொண்டுபோக எப்போதும் ஆயத்தமாயிருக்கும். வீட்டிற்குச் சிறிதுதூரத்தில் குடியிருந்த வேலைக்காரர்களுக்குக் கட்டளைகளைக் கொண்டுபோகும்; அப்படிக் கொண்டுபோகும்போது அவர்கள் வீட்டுக் கதவுகளை ஆத்திரத்தோடு போய்ப் பிறாண்டும்; மற்றக்காலங்களில் அவர்கள் வீட்டு அடுப்பண்டை அவர்களுடன் குளிர்காயப் போகும்போது பொறுமையோடு காத்திருக்கும்; அப்படிப்பட்ட நாய் காகிதங் கொண்டு போகும்போது ஆத்

திரத்தோடு கதவைப் பிறண்டி, தான் போகும் வேலைக்குத் தகுந்த நிதானத்தோடு உள்ளேசென்று கடிதத்தைச் சாக்கிரதையாகக் கொடுக்கும் ; கடிதத்தைக் கொடுக்காமல் திரும்பாது. காணமற்போன பொருள்களைத் தேடியெடுப்பதிலும் அது உபயோகமுள்ளதாயிருந்தது. போசனசமயத்தில் தன்னை அழைக்காமற்போனால், அது தொப்பி புத்தகம் முதலிய ஏதாவது ஒரு வஸ்துவை வாயில் கௌவிக்கொண்டு தன் எசமானனிடத்திற் கொடுக்கப் போகிறதுபோல உள்ளே நுழையும். தன் எசமானனுடைய குதிரையை லாயத்திற்கு நடத்திக்கொண்டு போக உத்தரவு பெறுவதில் அதிக பிரியமுள்ளதாயிருக்கும்.

3. வண்டிக்குள் ஒரு நாயைவிட்டு அடைத்து நெடுந்தூரம் கொண்டுபோனாலும், அது தான் வந்த வழியை முன்பு அறியாதிருந்தும் திரும்பிவந்து முன்பு நின்ற இடத்திற் சேரும் ; அது இன்னவிதமாக வழியைக் கண்டறிகிறதென்று தெரிந்து கொள்ளக்கூடவில்லை.

4. ஒருமுறை நியூவௌண்டுலாந்திலிருந்து ஒரு சரியான ஜாதிநாய் லந்தன் நகரத்திலே தேம்சுஆற்றுத்தெருவில்குடியிருந்த துரை ஒருவருக்கு அனுப்பப்பட்டது. அவர் அந்த நாயைத் தன்னிச்சையாய்த் திரியும்படி விட்டு வளர்ப்பதற்குத் தகுதியான இடம் இல்லாததினால், ஒரு சிறு கப்பலில் ஏற்றி ஸ்காத்திலாந்தில் தம் சிநேகனொருவனுக்கு அனுப்பினார். அது அங்கே சேர்ந்து சமயம் பார்த்திருந்து ஓடிவந்து விட்டது. ஸ்காத்லாந்திலிருந்து இங்கிலாந்துக்குப் போகிற சாலையை அது முன் ஒருபொழுதும் காணாதிருந்தும், எப்படியோ வழிபிடித்து மேற்சொல்லிய துரையினுடைய வீட்டிற்கு வந்துசேர்ந்தது. சேர்ந்தும், வழியில்உணவு இல்லாததினால் மிகவும் மெலிந்து வந்து, தன் எசமானனைப் பார்த்துச் சந்தோஷித்து இறந்தது.

5. சாதாரணமாகப் படுக்கையறைக்குச் சமீபத்திலேயே வராத சில நியூவெளந்துலாந்திய நாய்கள்; தங்களை வளர்த்த ஆடவர்கள் வீட்டிலில்லாதபோது, ஸ்திரீகளுடைய சயன அறையின் வாசலுக்கு முன் இராமுழுவதும் காவலிருந்ததாகக் கேள்வி. அந்நாய்களுக்கு எவ்வளவு அறிவிருந்து அப்படிச் செய்திருக்கவேண்டும்!

6. சில வருஷங்களுக்குமுன் சில வேட்டைநாய்கள் இங்கிலாந்திலுள்ள லிவர்பூல் துறையிலிருந்து தோணியில் ஏற்றி அயர்லாந்துக்கு அனுப்பப்பட்டன. அவைகள் அக்கரை சேர்ந்தபின்பு, அக்கரைக்குத் தொலைதூரத்தில் நடுநாட்டில் நாய்கள் வளர்க்கப்படுகிற ஒரு இடத்திலே கொண்டுபோய் விடப்பட்டன. அவைகளில் ஒன்று அவ்விடத்தில் இருக்க இஷ்டப்படாமல் முன் இறங்கின துறைக்கு ஓடிப்போயிற்று. துறையில் சேர்ந்தபொழுது, இராணுவவீரர்கள் அங்கிருந்து லிவர்பூலுக்குப் போகக் கப்பல் ஏறுகிற சமயமாயிருந்தது. இது நல்ல தருணமாயிருந்தபடியால் தானும் அவர்களுடன் ஏறிற்று. ஜனசந்தடியினால் அதை ஒருவரும் கவனிக்கவில்லை. அது கரைசேர்ந்தபின்பு, தன்னை வளர்த்த வேட்டைக்காரனுடைய வீட்டிற்குப் போய்ச்சேர்ந்தது. அவன் விடியற்காலத்தில் மெத்தையிலிருந்துகீழேயிறங்கும்போது அவனுடைய பழைய நாய் வாலாட்டிக்கொண்டு அவனுக்கு எதிரே நின்றது.

7. இதேமாதிரியாக இறந்துபோன லான்ஸ்டேல் பிரபு முன்னொருவிசை சில வேட்டைநாய்களை அயர்லாந்துக்கு அனுப்பினார். அவற்றில் மூன்று அங்கிருந்து தப்பித்துக் கொண்டு இங்கிலாந்துக்கு வந்து சேர்ந்தன. தாங்கள் வளர்ந்த ஸ்தலத்திலோ தங்களை வளர்த்த எசமானர்களிடத்திலோ இந்த நாய்களுக்கு எவ்வளவு பற்றில்லாமல் அவை மேற்சொன்னபடி எப்பொழுதும் போயிராத மார்க்கங்களிலெல்

லாம் போய், அந்த ஸ்தலங்களையாவது எசமானர்களையாவது தேடி அடையும்?



## 9. கல்மழை, உறைபனி, பனி, மூடுபனி.

### கல்மழை.

1. மழைத்துளிகள் மேகத்தினின்று கீழே விழும்போது, சடிதியில் உண்டாகும்குளிர்ச்சியினால் இறுகிப்போனால், அது ஆலங்கட்டி அல்லதுகல்மழையாகிறது. மேகம் இறுகிமழைத் துளிகளாகவிழும்போது,திடீரென்றுமிகவும் குளிர்ந்த காற்று அவற்றின்மீது பட்டால், அத்துளிகள் சில சமயங்களில் உறைந்து சிறு நீர்க்கட்டிகளாகின்றன. கல்மழையானது சாதாரணமாக அதிக சுவல்பகாலந்தான் பெய்யும்; கால்மணி நேரத்திற்கதிகமாகப் பெய்கிறது மிகவும் அரிது; ஆனால், சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன்பாக வட அமெரிக்காவில் இரண்டுநாள் கல்மழை விடாமல் பெய்ததாகச்சொல்வார்கள். சாதாரணமாக ஆலங்கட்டிகள் சிறு பட்டாணியளவினவாக இருக்கும். இந்துதேசத்தில்சில இடங்களில்சற்றேறக்குறைய மூன்று நான்கு அங்குல கனமுள்ளனவாகவும், ஒவ்வோரிராத்தல் எடையுள்ளனவாகவும் விழுந்திருக்கின்றன. பதினுன்கிராத்தல் எடையுள்ள ஆலங்கட்டிகளும் ஒருகாலத்தில் விழுந்தனவென்றுசொல்வதுண்டு. கல்மழையானதுசாதாரணமாகக் கொஞ்சதூரந்தான் பெய்கிறது; ஆனால் ஏகதேசத்தில் விஸ்தாரமான பிரதேசத்தில் பெய்திருக்கிறது. 1788-ம்வருஷத்தில் பிரான்சுதேசத்தில், சுமார் 600 மைல் நீளமும், 6 முதல் 12 மைல்வரையில் அகலமுமுள்ள இரண்டிடங்களில் பெய்தது. ஆலங்கட்டிகள் பெரிய அளவாகவும் நீடித்தகாலமாகவும் விழுமானல் சிறியஜெந்துக்களும் பயிர்பூண்டு முதலானவைகளும் அதிக நஷ்டமடையும்.

## உறைபனி.

2. மழைத்துளிகளானவை கீழே இறங்கும்போது சடிதியில் உண்டாகும் அதிகக் குளிர்ச்சியினால் உறைந்து போனால் அவை ஆலங்கட்டி அல்லது கல்மழையாகப் பூமியின்மேல் விழுகின்றனவென்று மேலே சொல்லப்பட்டன அல்லவா? நீராவியின் அணுக்கள் மழைத்துளியுருவை அடையாமலே உறைந்துபோமானால், அவை உறைபனியாகப் பூமியில் விழும். உறைபனி குளிர்ச்சியான தேசங்களிலும் உயரமான மலைகளிலும் பெய்யும். குளிர்ந்த தேசங்களில் மாரிகாலத்தில் அப்பனி இடைவிடாது பெய்து, புல்பூண்டுகளையும், சில சமயங்களில் மரங்களையும் அநேகநாள்வரையில் மூடிக்கொண்டிருந்து பிறகு சூரியவெப்பத்தினால் கரைந்து நீராகிப்போம். சில சமயங்களில் அவ்வுறைபனி இரண்டொரு மாதவரையில் கரையாமலே யிருக்கும். உன்னதமான பருவதத்தினுச்சிகளை வருஷத்திற் பெரும்பாலும் இப்பனி இடைவிடாது மூடிக்கொண்டிருக்கும்; சூரியவெப்பத்தினால் சிறிது சிறிதாகக் கரைந்து மலை அருவிகளையும் ஆறுகளையும் இடைவிடாது பிரவகிக்கச் செய்யும்.

3. இந்துதேசத்து வடஎல்லையாக அமைந்திருக்கும் மலைத்தொடருக்கு இப்பனியாலேதான் இமாசலம் என்று பெயர் வந்தது. (இமம் என்றால் பனி, அசலம் என்றால் மலை.) அதற்குப் பனிவரை என்றும் பெயர். சுமார் 15,000 அடிக்குமேல் இமயமலையின் உச்சிமுழுவதும் எப்போதும் உறைபனியால் மூடப்பட்டிருக்கிறது. இப்பனியானது சிறிதுசிறிதாகக் கரைவதனாலேதான் அம்மலையினின்று உற்பத்தியாகும் கங்கை, யமுனை, பிரமபுத்திரி, சிந்துமுதலிய நதிகளில் ஜலம் இடைவிடாது ஓடிக்கொண்டிருக்கிறது.

3

## பனி.

4. சாதாரணவாயுவோடு கலந்து ஆகாயத்தில் நிற்கும் நீராவியானது குளிர்ச்சியடைந்தால் அதன் அணுக்கள்சேர்ந்து திரண்டு மேகரூபமடைகிறதென்று முன் சொல்லப்பட்டதல்லவா? பூமிக்குச் சமீபத்திலுள்ள சாதாரணவாயுவோடு கலந்து நிற்கும் நீராவியானது, குளிர்ச்சியடைந்திருக்கும் பூமி, புல், பூண்டு முதலானவைகளிற்படும்போது அதிநுட்பமான நீர்த்துளிகளாகமாறி அப்பொருள்களின்மீது தங்குகின்றது. முத்துக்களைப்போன்ற இச்சிறு நீர்த்துளிகளைத்தான் பனி என்கிறோம். பனிக்கட்டியாவது குளிர்ந்த வேறு வஸ்துவாவது உள்ள ஒரு சீசாவை உஷ்ணமாயுள்ள சாதாரண வாயுவிற்கொண்டுவந்தால், அந்தச் சீசாவுக்கு வெளிப்புறத்தில் சிறு நீர்த்துளிகள் வந்தடையும். சாதாரணவாயுவிலிருக்கும் நீராவியானது குளிர்ந்திருக்கும் சீசாவின்மேல் பட்டவுடனே அதிலுள்ளஉஷ்ணத்தை அச்சீசாகிரகித்துக்கொள்ள, ஆவிகுளிர்ந்து ஜலரூபமடைந்து, அப்பாத்திரத்தின்மேல் ஒட்டிக்கொள்ளும். இதுபோலவே பனியும் உண்டாகிக் குளிர்ந்திருக்கும் வஸ்துக்களின்மீது தங்கும். பகற்காலத்தில் சூரிய கிரணங்களால் பூமி வெப்பத்தை அடைகிறது; சூரியன் அஸ்தமித்த உடனே பூமியிலிருக்கும் உஷ்ணமானது ஆகாய வழியாய் வெளிப்பட, அதன்மீதிருக்கும் வஸ்துக்கள் அதிசீக்கிரத்தில் குளிர்ச்சியடைகின்றன. அப்போது முன் சொன்னபடி பனி யுண்டாகின்றது. ஆகாயம் மந்தாரமாகவிருக்கும்போது பூமியின்மேல் ஒரு கம்பளம் மூடியதுபோலிருப்பதால், பனி அதிகமாக உண்டாவதில்லை. மேகசஞ்சாரமில்லாமல் ஆகாயம் வெளுத்திருக்கும் இரவுகளில் பனி அதிகமாக உண்டாகும்.

### மூடுபனி.

5. ஆகாயத்தின்உயரத்தில்சாதாரணவாயுவிலுள்ள நீராவி குளிர்ச்சியடைந்தால் மேகரூபத்தை அடையுமென்று சொல்லப்பட்டதல்லவா? அவ்வண்ணமாகவே, பூமிக்கருகில் சாதாரணவாயுவிலுள்ள நீராவியானது குளிர்ச்சியடைந்தால் மூடுபனியாகிறது. பனிக்கும் மூடுபனிக்கும் வித்தியாசம் என்னவென்றால், பனி பூமியின்மீதுள்ள பொருள்களில் உண்டாகும்; மூடுபனி பூமிக்குச் சற்று உயரத்திலுள்ள ஆகாயத்தில் உண்டாகும். மூடுபனியில் சிறிது ஜலத்தின் உருவைப் பெற்றுப் பூமியின்மீது விழும், சிறிது சூரியவெப்பத்தால் மறுபடி ஆவியின் உருவைப் பெற்றுச் சாதாரணவாயுவிற் கலக்கும். மூடுபனியென்பது பூமிக்குச் சமீபத்திலாவது பூமியைத் தொடும்படியாயாவது உள்ள மேகமேயாம். அது அதிநுட்பமான மழைத்துளிகள்போன்று எல்லாவற்றையும் மூடிக்கொண்டிருக்கிறது. அதனைக் காற்றில்லாமையால் பூமியின்மீது இறங்கின மேகமென்று சொல்லலாம். அப்படி இறங்காமல்ஆகாயத்தில் இன்னும் சிறிதுகாலமிருக்குமாயின் அதன் சிறு துளிகள் முன்னிலும் அதிகமாக இறுகி, ஒன்றோடொன்று சேர்ந்து பெருந்துளிகளாகிச் சாதாரணமழையாக விழும்.

## 10. வெட்டுக்கிளி.

1. உலோகஸ்டு என்னும் ஒருவித வெட்டுக்கிளி ஏறக்குறைய மூன்றங்குல நீளமும் பறக்குந் திறமையுமுள்ள பூச்சி. இந்தப் பூச்சி பயிர்களை மிகவும் நாசஞ்செய்யும். இது செய்யும் கெடுதி மிகப் பிரசித்தமாயிருக்கிறது. இச்சாதி வெட்டுக்கிளிகளில் பல பேதங்கள் உண்டு; அவை எத்தேசத்திலும் இருக்கின்றன. அவை சாதாரணமாகக் கூட்டங்கூட்டமாக வெளிப்படும். அவை அதிசீக்கிரத்தில் விர்த்தியாகிற



படியால், அவை போகும் தேசங்களிலுள்ள பயிர்கள் யாவும் அவற்றால் அழிந்துபோகின்றன. அவற்றின் முக்கியமான உணவு தானியப்பயிர்களே. வசந்த காலத்திலும் கோடை காலத்தின் ஆரம்பத்திலும் அவைசிறகுகளில்லாமல் புழுவாக விருக்கும். கோடைகாலத்தின் கடைசியில் அவை சரியாக வளர்ந்து முழுப்பூச்சிகளாகும்.

2. இவ்வினத்தைச் சேர்ந்த வெட்டுக்கிளிகளில் தேசந் தோறும் பறந்துதிரியும்ஜாதி உருவத்தில் சிறியதாகவிருந்தும் மனிதருக்கு மிகக் கெடுதி செய்கின்றது. இவ்வெட்டுக்கிளி கள் மிகவும் அதிகமாக உண்டாகிறபடியால், அவ்விடத்திலு ள்ள பயிரையெல்லாம் அதிசீக்கிரத்தில் அழித்துவிடுகின்றன. அவை தங்களுக்கெட்டின தூரத்திலுள்ளவற்றையெல்லாந் தின்றுவிட்டுக் கும்பலாகப்பறந்து அடுத்தநாட்டிற்கும் போகி ன்றன. சில சமயங்களில் அவை கோடானுகோடியாகச் சேர் ந்து ஆகாயத்தில் பறக்கிறபடியால் அத்தருணத்தில் அவை களின் மறைவால் ஆகாயம் இருண்டுபோய்விடும். அவை பயிர்களின்மீது இறங்கின சிறிது பொழுதிற்கெல்லாம் அப் பயிர்நிலம் கரம்புநிலம் போலாகிவிடும்.

3. ஐரோப்பாக்கண்டத்தின் மத்திய பாகத்திலுள்ள அநேக நாடுகளிலும், ஈஜிப்டு, சிரியா நாடுகளிலும், ஆசியாக்கண்டத்

தின் தென்பாகத்திலும் இப்பூச்சிகள் காலந்தப்பாமல் போய்ச் சனங்களுக்கு அச்சத்தையும் திகிலையும்உண்டாக்கும். அவை அபரிமிதமாகப் பறந்துபோய், சிறிது நேரத்திற்கெல்லாம் மிகச்செழிப்பான நாடுகளைப் பாழான பாலைவனங்கள்போல் ஆக்கிவிடும். சில சமயங்களில் புலங்களிலுள்ள இலைகளின் தொகைகளைப்பார்க்கிலும் இவைஅதிகமாக இருப்பதுமல்லாமல் ஏறக்குறைய 2,000 சதுரமைல் விஸ்தீரணமான நிலத்தையும் மூடிக்கொண்டிருக்கும். இவை காற்றினால் சமுத்திரத்தில் போய்விழுந்து கரையில் ஒதுக்கப்படும்போது, மூன்று நான்கடி உயரமுள்ளதாய் ஐம்பதுமைல் தூரம் வரையில் சமுத்திரத்திற்கு அணைபோட்டாற்போல் தோன்றும். அப்பிணக்குவையாலுண்டாகும் துர்நாற்றம் 150 மைல் தூரம்வரையில் வீசும். 1478-ம்வருஷம் வெனீசுநாட்டில் முக்கியமாய் இவ்வெட்டுக்கிளிகள் செய்த நாசத்தைப்பற்றி நேரிட்ட கருப்பினால் 30,000 பேர் மடிந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஐரோப்பாக்கண்டத்துத் தென்னாடுகளில் இப்பூச்சிகளையும் இவற்றின் முட்டைகளையும் சேர்த்துக் கொண்டு போகிறவர்களுக்கு வெகுமதி கொடுக்கிறார்கள். ஒரு சமயத்தில் பிரான்சுதேசத்திலுள்ள மார்ஸேல்சு பட்டணத்தில் இதற்காக 8,000 ரூபாய்கள் கொடுக்கப்பட்டன. துருக்கியிலும் சீனத்திலும் மேற்கண்டபடி பரிசு கொடுக்கிறார்கள். இப்பூச்சிகள் சாதாரணமாகத் தோன்றும் தேசங்களில்வாழும் ஜனங்கள் அவற்றைப் பிடித்து வறுத்துச் சாப்பிடுகிறார்கள். சில இடங்களில் இச்செந்துக்கள் அழித்த தானியங்களை இழந்த ஜனங்கள் கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது தங்கள் சாப்பாட்டுக்கு உதவும்படி அவற்றைப்பிடித்து ஊறுகாயாகச் செய்துவைத்துக்கொண்டு சாப்பிடுகிறார்கள்.

4. சில வருஷங்களாகப் பாஞ்சாலம், வடமேற்கு மாகாணங்கள், மத்திய மாகாணங்கள், சென்னைராஜதானியைச்

சேர்ந்த சில ஜில்லாக்கள் ஆகிய இப்பிரதேசங்களில் இவ் வெட்டுக்கிளிகள் தோன்றிப் பயிர்களை யழிக்கின்றன. அவை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் போகும்போது பூமிக்குமேல் ஐம்பதுகஜத்துக்குக் குறையாததும்நூறுகஜத்துக்கு அதிகப்படாததுமான உயரத்தில் பறந்துபோம். அப்படிப் பறந்து செல்லும் கூட்டங்களில் ஒவ்வொரு கூட்டம் இரண்டு மூன்று மைல் நீளமுள்ளதாகவிருக்கும். அவை அவ்வாறு பறந்துபோகும்போது உண்டாகும் ஒருவிதச் சத்தம் அதிக தூரம் கேட்கத்தக்கதாக இருக்கிறது. அவை ஆகாயத்தில் பறக்கும்போது பெரிய மேகங்களைப் போலச் சூரியனை மறைத்துப் பூமியின்மீது நிழலை உண்டாக்குகின்றன. 1880-ம் வருடம் மார்ச்சுமீ 4உ ஒத்தைநகர மார்க்கமாகச் சென்ற ஒரு கூட்டம் பன்னிரண்டு மைல் நீளமும் மூன்றுமைல் அகலமுமாகவிருந்ததுமல்லாமல், அவை சூரியனை மறைத்து நிழலை யுண்டாக்கும்படியான அவ்வளவு நெருக்கமாகவுமிருந்தன. 1881-ம் வருடம் எப்பிரல்மீ 26உ பெல்காம் மார்க்கமாகப் பறந்துபோன மற்றொரு கூட்டம் அப்பட்டணத்தைக் கடப்பதற்கு அரைமணிக் காலத்திற்கதிகமாகச் சென்றது.

5. பெட்டைப்பூச்சிகள் பூமியின்கீழ் ஓர் அங்குலம் பள்ளம் தோண்டி, அப்பள்ளத்தில் முப்பதிற்குக் குறையாமல் சுமார் நூறு முட்டைகள்வரையிலும் ஒன்றாய்ச் சேர்த்துஇடுகின்றன. இப்பூச்சிகள் முட்டையிட்டிருக்கும் நிலத்தைத் திருப்பித் திருப்பி உழுதால் அம்முட்டைகள் முற்றும் அழிந்துபோய்விடும். முட்டைகளிலிருந்து பூச்சிகள் புறப்பட்ட சில தினங்களுக்குள் சிறு பள்ளங்கள் தோண்டி அப்பள்ளங்களில் அவற்றைத்துரத்தி மேலே மண்ணைப் போட்டு அழுந்த மூடினால் அப்பூச்சிகளை அதிசுலபமாக அழித்துவிடலாம்.

பூச்சிகள் முட்டைகளிலிருந்து வெளியே வந்தவுடனே அவை பறக்கமாட்டாவாகையால் அப்போது அவற்றைச் சுலபமாக நாசஞ்செய்யலாம். அவை முட்டையிலிருந்து வெளிப்பட்டவுடனே அவைகளை அழிப்பதுதான் மிகவும் நன்மை.

## 11. காப்பிக்கொட்டை.

1. காப்பிச்செடி ஆதியில் அராபியாவில் இருந்ததாகப் பலர் அபிப்பிராயப்படுகின்றனர். சிலர் அபிஸீனியாவிலிருந்ததென்றும் சொல்லுகின்றனர். எப்படியிருந்தபோதிலும் மிகுதியாய் உஷ்ணப்பிரதேசங்களில் நெடுங்காலமாக அது



பயிரிடப்பட்டுவருகிறது. செவ்வையாக வளரும்படி விடப்பட்டால் காப்பிச்செடி பதினறு பதினெட்டடி உயரம் வளரும். அதின் பழங்களைப் பறிப்பதற்கு அனுகூலமாகவிருக்கும்

படி அதை ஐந்தடிக்குமேல் வளரவிடுகிறதில்லை. அவ்வாறு அதன் வளர்ச்சி தடுக்கப்படும்போது அதன் கிளைகள் அதைச் சுற்றியுள்ள நிலத்தை நன்றாய்க் கவிந்துகொள்ளும். அது மல்லிகைப் பூப்போன்ற நல்ல பளபளப்பான வெள்ளை நிற மலர்களை அதிகமாகப் புஷ்பிக்கும். அப்புஷ்பங்கள் சீக்கிரத்தில் மலர்ந்து நல்ல வாசனையைத் தரும். ஒவ்வொரு பூவிலிருந்தும் ஒவ்வொரு பழம் உண்டாகும். அப்பழங்களைச் சுற்றிச் சற்று வெளுத்துச் சிறிது பசைத்தன்மையுள்ள சதைப்பற்றிருக்கும். அச்சதைக்குள் ஒரு பக்கம் உருட்சியாயும் மற்றொரு பக்கம் தட்டையாயும் நடுவில் பிளப்பாயுமுள்ள இரண்டு விதைகளுண்டு.

2. காப்பிச்செடி இரண்டு மூன்று வருஷம் வளர்ந்தபின்பு காய்க்க ஆரம்பிக்கும். அப்படிக் காய்த்துப் பழுத்தபின் சாதாரணமாக மே மாதத்தில் அப்பழங்களைச் சேர்க்கிறது வழக்கம். செடிகளின்கீழ் வஸ்திரங்களைப் பரப்பி அவற்றைக் குலுக்கி, விழுந்த பழங்களை யெடுத்துக்கொள்ளுவார்கள். இப்பழங்களைப் பாய்களின்மீது வெயிலில் உலர்த்தி, மரம், இரும்பு, கல் இவைகளில் ஒன்றினுற் செய்யப்பட்ட உருளைகளால் அரைத்து இப்பழங்களின்மேலுள்ள தோலை நீக்கிவிட்டு, மறுபடியும் இரண்டாவது விசை கொட்டைகளை வெயிலிற் காயவைத்துப் புடைத்துச் சுத்திசெய்து வைத்துக்கொள்ளுவார்கள்.

3. காப்பிக்கொட்டையிற் சிறந்தது அராபியாவில் விளையும் மோக்காக் காப்பியென்று சொல்லுவார்கள். அத்தேசம் சௌக்கியமாயும், மிதமான சீதோஷ்ணங்களையுடையதாயும், மழையினுலும் எண்ணிறந்த குளங்கள் கேணிகளினுலும் ஜல சமிருத்தியுடையதாயும் இருப்பதனுல், காப்பிச்செடி அவ்விடத்தில் நன்றாய்ப் பயிராகிறது. சென்னைராஜதானியிலுள்ள

அநேக மலைப்பிரதேசங்களும் இச்செடிக்கு ஏற்றவையாக இருக்கின்றன. இலங்கையிலும் பெரும்பாகமான இடம் இப்பயிருக்குச் சிறந்ததாக இருக்கிறது. இவ்விராஜதானியில் சில வருஷங்களாகத்தான் காப்பிப்பயிர் அபிவிர்த்தியாய் வருகிறது. மேற்குக் கணவாய்களிலுள்ள காட்டுநிலங்களில் சிரேஷ்டமான காப்பிக்கொட்டைகள் பயிராகின்றன. நீலகிரி, சேர்வராயமலை, பழனிமலைச் சரிவுகளிலும், மைசூர்ச்சீமையிற் சில பாகங்களிலும் இப்போது இச்செடி பயிராக்கப்படுகிறது. காப்பி தென்அமெரிக்காவிலும் ஜாவாதீவிலும் உண்டு.

4. காப்பிக்கஷாயம் தேகத்துக்கு அனுகூலமான தென்று நெடுங்காலத்திற்குமுன்னமே அராபியர்களுக்குத் தெரிந்திருந்தது. 1554-ம்வருஷத்தில் ஐரோப்பிய துருக்கிக்கு அது கொண்டுபோகப்பட்டது; அங்கிருந்து பிரான்சுக்கும் அதற்கப்புறம்1652-ம்வருஷத்தில் இங்கிலாந்திற்கும்கொண்டுபோகப்பட்டது. பச்சையாயிருக்கும்போது இக்கொட்டை கொஞ்சம் வெளுத்தபழுப்பு நிறமாக விருக்கும். அப்போது அதற்கு உருசியுமில்லை மணமுமில்லை. வறுக்கும்போது கொஞ்சம்சூடு ஏறினவுடனே அதில் விசேஷ பேதம் உண்டாகிறது. கொட்டை அதிகமாக உப்பி அதிலிருந்து ஒரு சுகந்தம்உண்டாகிறதுமல்லாமல், அது கசந்து எளிதில் பொடியாக்கக்கூடியதும் ஆகும். காப்பிக்கொட்டையை வறுத்தபிறகு நெடுநாள்சும்மா வைத்திருக்கலாகாது; அதை உபயோகப்படுத்துவதற்குமுன்னமும் பொடியாக்கக்கூடாது. காப்பிக்கொட்டை உற்சாகத்தையுண்டாக்குவதுமல்லாமல் நித்திரையையும் வரவொட்டாது. இரவில் அதிகமாகச் சேர்த்தால் வெகுநேரம் நித்திரையைத் தடுக்கும். போஜனத்தின்மேல் சாப்பிட்டால் ஜீரணசக்தியை உண்டாக்கும். மேலும் அது குளிர்ச்சியினாலும் ஈரத்தினாலும் தேகத்திற்குண்டாகும் வியாதிகளை நீக்கும்.

## 12. வைசூரி.

1. வைசூரியானது அதிசயமான ஒரு வியாதி. சாதாரணமாய் அது ஒருவரிடத்திலிருந்து மற்றொருவரைத் தொடருந்தன்மையுள்ளது; அது ஒருவருடைய வாழ்நாளில் ஒரே தரம் உண்டாகும். அது முதலில் காய்ச்சலோடு ஆரம்பமாய்ச் சில நாட்களுக்குப் பிறகு எரிகொப்புளங்களாக எழும்பும். அக்கொப்புளங்கள் சாதாரணமாகத் தேகமுழுவதும் பரவுகின்றன. வைசூரி அல்லது பெரியம்மை, தட்டையம்மை, சின்னம்மை, கொள்ளைக் காய்ச்சல் முதலானவை ஒன்றுக்கொன்று சம்பந்தமுடையவை.

2. இவ்வியாதிகள் யாவும் ஒருவரிடத்திலிருந்து மற்றவரைத் தொடரக்கூடியவைகளே. அப்படித் தொடருகிறதற்கு அவ்வியாதியில்லாதவர் அந்நோயுடையவரையாவது அவரிடத்திலுள்ள புண்முதலான அசுத்தங்களில் எதையாவது தொடுவதே காரணமன்று; அவருடைய வஸ்திரத்தைப் பரிசித்தலும், அவர் வசிக்கும இடத்திலுள்ள காற்றைச் சுவாசித்தலுமே போதுமான காரணமாகும்.

3. வைசூரி ஆதியில் எவ்விதமாக உண்டானதோ அதைத் தெரிந்துகொள்ளக்கூடவில்லை. ஆயினும் அது, ஒருவரிடத்திலிருந்து மற்றொருவருக்குத் தொத்த வேண்டுமேயன்றி வேறெந்த வகையாலும் உண்டாகக்கூடிய தன்று. இந்த விஷயம் மாத்திரம் சந்தேகமின்றி அறியப்பட்டிருக்கிறது. அவ்வியாதியைப்பற்றி இவ்வொருவிஷயம் தெரிந்துகொள்வதே போதுமானதாக இருக்கிறது. வைசூரி வேறெந்த வியாதியினாலும் தடைபட்டுக் குறையாது. அவ்வியாதியின் சொரூபமும் குணமும் எப்போதும் மனிதனைத் திகிலினால் வருந்தச்செய்

யும் சுபாவமுடையன. அது பலமாயுண்டாகும்போது தேக முழுவதும் கொப்புளமயமாகவே இருக்கும். அவ்வியாதியில்லாத ஒருவன் அவ்வைசூரி கண்ட ஒருவனிருக்கும் கிரகத்தில் சிறிதுகாலமிருந்து,அவ்வியாதிஸ்தன் சரீரத்தினின்றுண்டாகுங் காற்றைச் சுவாசிப்பானுனல், இவனுக்கும் அவ்விதமாகவே வைசூரி உண்டாகும்.

4. கிறிஸ்து பிறந்தபின் எண்ணூறு வருஷகாலவரையிலும் ஐரோப்பாக் கண்டத்தில் இவ்வியாதி கிடையாது. வியாதிகளை நன்ருய்ப் பரிசோதனைசெய்து விவரித்திருக்கும்கிரீக்கு ரோம ராச்சியத்துப் பூர்வ ஆயுள்வேதியர்கள் இவ்வைசூரியைப்பற்றி ஒன்றும் எழுதவில்லை. ஆயினும் கிறிஸ்து பிறக்க ஆயிரம் வருஷங்களுக்குமுன்னமே இவ்வியாதி சீனதேசத்திலும் இவ்விந்து தேசத்திலும் உண்டாயிருந்ததென்பது நிச்சயம்.

5. மகம்மது பிறந்த வருஷத்தில் வைசூரி அராபியாவில் உண்டானதென்று அத்தேசத்து வைத்திய கிரந்தங்களினுல் தெரியவருகிறது. அதற்குப்பிறகு அரபியர்கள் யுத்தத்திற்குப் போன இடங்களிலெல்லாம் அவர்கள் மூலமாய் இக்கொடிய வியாதி பரவி, மூர்சு ஜாதியார் ஸ்பெயின் தேசத்திற்குச் சென்றபோது ஐரோப்பாக் கண்டத்தில் பிரவேசித்து, அதி சீக்கிரத்தில் எங்கும் வியாபித்து அநேகரைக் கொன்றது. இந்நோயுண்டாகி வெகுகாலம்வரையில் அநேக தேசத்தார்கள் இவ்வியாதிக்குத் தப்பித்துக்கொண்டிருந்தும் கடைசியில் வேறு தேசத்தார் மூலமாக அத்தேசங்களிலும் இது வியாபித்து நிலைபெற்றது.

6. புதிய கண்டமென்று சொல்லப்படும் அமெரிக்காவில் 390 வருஷங்களுக்குமுன் இவ்வியாதி இல்லையென்பது நிச்சயம். கடைசியில் வைசூரி வார்த்த ஓர் ஆப்பிரிக்காக் கண்

டத்தான் தென் அமெரிக்காவிலுள்ள மெக்சிகோவில் இறங்கினான். அவன் மூலமாகச் சிலகாலத்திற்குள் இவ்வியாதி அத்தேச முழுவதும் வியாபித்து மிகுந்த கெடுதிசெய்தது. இவ்வியாதியினால் மாத்திரம் 35 இலட்சம்பேர் மடிந்தார்கள். எவ்வகையாலோ இவ்வியாதி மற்றொரு தேசத்தில் பிரவேசித்து அவ்விடத்து ஜனங்களில் நாலிலொரு பங்கிற்கதிகமான 16,000 பேரை நாசஞ்செய்தது.

7. இக்கொடிய வியாதியினுடைய உற்பவம், விருத்தி, சுபாவங்களைத் தெரிந்துகொள்வது ஆவசியகமாக இருக்கிறது. இது காணும்போது முதலில் குளிர்காய்ச்சலும் அதன் பின் தேகத்தில் வறட்சியும் உண்டாகின்றன; தோல் மிருது வற்று, நாடி படபடத்து, வயிற்றுநோய், அரோசிகம் வாந்தி, தலைநோய், சில வேளைகளில் அதிக மயக்கம் இவைகள் உண்டாகின்றன. சிலர் தேகங்களுக்கு இவ்வியாதி ஆரம்பிக்கும்போது கை கால் இழுப்பும் காணுகின்றது. சாதாரணமாக ஜ்வரங்கண்ட மூன்றுநாள்முத்துக்கள் காணுகின்றன; முத்துக்கள் எவ்வளவு சீக்கிரத்திலே எழும்புகின்றனவோ அவ்வளவும் வியாதி உக்கிரமாக இருக்கும்.

8. முத்துக்கள் முதலில் முகத்தில் கண்டு, பிறகு கழுத்திலும், அதன்பின் மணிக்கட்டுகளிலும், அதற்குப் பிறகு உடம்பிலும், கடைசியில் பாதங்களிலும் உண்டாகின்றன. ஐந்து நாள்வரையிலும் முத்துப் புறப்பட்டுக்கொண்டேயிருக்கும். சிறிது சிறிதாக இம்முத்துக்கள் நாளுக்குநாள்பருத்துக்கொப்புளங்களாகி எட்டாநாளில் பழுத்து உடைந்து பக்குக்கட்டுகின்றன. அதற்கப்புறம் நாலைந்து நாட்களில் அந்தப் பக்குகள் உதிர ஆரம்பிக்கும். சாதாரணமாக வைசூரி இவ்வாறு உண்டாகிறது வழக்கம். சிலவேளைகளில் இவ்வகைகள் வித்தியாசப்படுவதும் உண்டு.

9. வைசூரி இப்பிரபஞ்சத்தில் அதிக அகோரமும் அருவருப்புமான கொள்ளைநோய்களில் ஒன்று. இக்கொடிய வியாதி காணும்போதெல்லாம் சாதாரணமாய் ஜனங்களுக்கு அதிகபயத்தை உண்டாக்குகிறது. இது ஓரிடத்தில் கண்டால் ஜனங்கள் திகிலடையும்படி அங்கிருந்து அதிசீக்கிரத்தில் பரவி அநேகரை நாசஞ்செய்யும். இது பிரவேசிக்கும் கிராமங்களும், பட்டணங்களும், மாகாணங்களும் பிரஜைகளற்றுப் பாழாய்ப் போகும்படி அவ்விடங்களிலுள்ளவர்களை ஆயிரம் பதினாயிரம் கணக்காக மடியச்செய்கிறது. ஆகையால் இவ்வியாதி எப்போதும் அணுகாமலிருக்கும்படி மனிதர்களைக் காப்பாற்றத்தக்க சிகிச்சை யொன்றுண்டானால் அது பெரும் பேறாக வெண்ணத்தக்கதென்பதற்குச் சந்தேகமுண்டா? அப்படிப்பட்ட சிகிச்சையைக் கண்டறிந்து பிரசுரப்படுத்தின உபகாரி யொருவனிடத்தில ஜனங்கள் எவ்வளவு நன்றியறிவுள்ளவர்களாயிருக்கவேண்டும். அச்சிகிச்சை யாதெனில் அம்மை குத்துவிப்பதுதான்.

## 13. தேயிலை.

1. தேயிலையானது ஓர் அடர்ந்த செடியின் தழை. அதனால் ஒருவித உருசியும் பிரயோசனமுமுள்ள கஷாயம் செய்யப்படுகிறது. தேயிலைச்செடி சீனா ஜப்பான் தேசங்களில் உற்பத்தியாகின்றது. அது பெரும்பாலும் பள்ளத்தாக்குகளிலும், மலைச்சரிவுகளிலும், தென்றற்காற்று வீசும்படியான ஆற்றங்கரை யோரங்களிலும் செழிப்பாக வளரும்.

2. வருஷந்தோறும் அக்டோபர் மாதத்தில் விதைகளையெடுத்து, வசந்தகாலம் வருமளவும் மணலிலும் பூமியிலும்



புதைத்துவைப்பார்கள். வசந்தகாலம் வந்தவுடனே புலத்தின் ஒரு மூலையில் நாற்றுக்காக விதைகளை விதைப்பார்கள். ஒரு வருஷத்திற்குள் அந்த நாற்றுப் பத்துப்பன்னிரண்டங்குலம் வளரும். அப்போது அதைப் பிடுங்கி, வரிசை வரிசையாகக் குழிகள்தோண்டி, ஒவ்வொரு குழியில்ஐந்தாறு விழுக்காடு நடுவார்கள். இக்குழிகள் ஒன்றுக்கொன்று மூன்று நான் கடித்தூரத்திலும், வரிசைகள்ஒன்றுக்கொன்றுநாலைந்துஅடித்தூரத்திலுமிருக்கும்.

3. மே, ஜூன் மாதங்களில் பெய்யும் மழையின் பலனை அடையும்படி எப்போதும் வசந்தகாலத்திலேதான் நாற்று நடுகிறார்கள். அம்மழையினால் அந்த நாற்றுகள் வேரூன்றும். பிறகு களையெடுப்பதொன்றே போதுமானதாக விருக்கிறது. இப்பயிரைத் தூரத்திலிருந்து பார்த்தால் மிகப் பசுமையாகக் காணப்படும்.

4. ஆடவர்கள், ஸ்திரீகள், குழந்தைகள் ஆகிய எல்லாரும் தழையைப் பறிப்பதற்கு அனுகூலமாக, அவர்கள் கைக்கு எட்டும்படி அச்செடிகளை ஐந்தாறடி உயரத்திற்குமேல் வளர விடுகிறதில்லை ; அதன் புஷ்பம் காட்டு ரோஜாப்பூவைப்போல் சற்று வெளுத்திருக்கும். மூன்றுவருஷம்வரையில் அச்செடியில் இலை பறிக்கிறதில்லை. அதற்கப்புறம் வருஷத்திற்கு மூன்று விசையாக ஏழெட்டுவருஷம் வரையில் இலைபறிப்பார்கள். இளஞ்செடியின் இலைதான் சிறந்தது. பறித்த இலைகளை முதலில் வெயிலில் காயவைத்துப் பிறகு நெருப்பில் வாட்டி, அப்புறம் வியாபாரத்திற்காகப் பெட்டிகளில் போட்டுவைப்பார்கள். தேயிலையில் பச்சையிலை கறுப்பிலை யென்று இரண்டுவிதம் உண்டு.

5. தேயிலை 1660-ம் ௵த்தில் முதல்முதல் இங்கிலாந்து தேசத்திற்குக் கொண்டுபோகப்பட்டது. அங்கே முதலில் அது இராத்தல் ஒன்றுக்கு முப்பது ரூபாய்வீதம் விற்கப்பட்டது ; இப்போதிராத்தல் ஒரு ரூபாய்க்கு வாங்கலாம்.

6. இந்தச் செடி இப்போது இந்துதேசத்திலும் சில இடங்களிற் பயிராகிறது ; ஆஸாமிலும், வடமேற்கு மாகாணங்களில் குமயூன், கர்வால் என்னும் பிரிவுகளிலும், சென்னை ராஜதானியில் நீலகிரியிலும் பயிராகிறது.

7. மிதமாகவும் சரியான விதமாகவும் சாப்பிட்டால் தேயிலைக் கஷாயம் இரைப்பைக்கும் குடலுக்கும் வலுவைக் கொடுத்து, ஜீரணசக்தியை யுண்டுபண்ணும்; மிதமின்றி அதிகமாகப் பானஞ்செய்தால், பெரும்பான்மையோருடைய தேகத்துக்கு ஒத்துக்கொள்ளாமல் விழிப்பை யுண்டாக்கி நித்திரைக்கு பங்கம் செய்யும்.

———

## 14. செம்பு, பித்தளை, வெண்கலம்.

### செம்பு.

1. செம்பு அல்லது தாமிரமானது மங்கிய சிவப்பு நிறமுடைய உலோகம். அது ஜலத்தைவிட ஒன்பது மடங்கு கனமுள்ளது. செம்பு கனிகளில் வெட்டியெடுக்கப்படும். தாமிரக் கனிகள் இங்கிலாந்து, சில்லி, ரஷியா, ஆஸ்திரேலியா, தென் ஆப்பிரிக்கா, ஸ்பெயின் முதலிய தேசங்களில் மிகுதியாக இருக்கின்றன. இங்கிலாந்து, வேல்சு, ஸ்காத்லாந்து, அயர்லாந்து இத்தேசங்களில் கனிகளினின்று இப்போது வருஷா வருஷம் சுமார் 67,200 பாரம் செம்பு எடுப்பதாக மதிக்கிறார்கள்; இதன் விலை சுமார் ஒன்றரைக்கோடி ரூபாயாகிறது.

2. நயப்பில் பொன்வெள்ளிகளுக்குப் பிற்பட்டது தாமிரந்தான். அதைத் தகடாகவும் அடிக்கலாம்; கம்பியாகவும் இழுக்கலாம். தாமிரம் உலோகங்களிலெல்லாம் மிக்க ஓசையுள்ளது. அது பொன் வெள்ளியைவிட அதிகமாக எளிதில் அகப்படுமாதலால், விலையில் அவற்றிற்குக் குறைந்திருக்கிறது. ஒரு பலம் பொன்னுக்குச் சற்றேறக்குறைய ஆயிரம் பலம் செம்பு வாங்கலாம். செம்பு பலவகையாக உபயோகப்படுகிறது. சமுத்திரஜலத்தில் கப்பல்கள் கெட்டுப்போகாம லிருக்கும்படி தகடுகளாக்கி அவைகளின் அடிப்புறத்தில் அடிப்பதற்கும், தவலை, கொப்பரைமுதலிய பாத்திரங்கள் செய்வதற்கும், தாமிரம் அதிகமாய் உபயோகப்படுகிறது. செம்பில் அதிசீக்கிரத்தில் களிம்பு பிடிக்கும். செம்பில் புளி பட்டவுடன் களிம்பு ஏறுகிறது. இந்தக்களிம்பு

பச்சைநிறமாக இருக்கும்; அது அதிக விஷத்தன்மையுள்ளது. ஆகையால் போஜன பதார்த்தங்கள் செய்யப்படும்செப்புப் பாத்திரங்களுக்கு வெள்ளீயம் பூசுவது அவசியம். அப்படி ஈயம் பூசப்படாத செப்புப் பாத்திரங்களில் வைத்த பதார்த்தங்களைத் தின்றதனால் இறந்தவர்கள் பலர். செப்புப் பாத்திரங்களில் உண்டாகும் களிம்பாகிய விஷத்திற்கு மாற்று முட்டையிலுள்ள வெள்ளைக் கரு. செப்புக் களிம்புக்குத் துருசு என்று பெயர். அது அசுத்தமாக இருக்கும்போது பச்சைவர்ணமாகவும், சுத்தமானபோது ஔஷதமாகவும் உபயோகப்படும்.

3. செம்பினால் நாணயங்கள் அடிக்கிறார்கள். செப்புநாணயங்கள் அரையணா, காலணா, பை இவைகளே.

### பித்தளை.

4. இரண்டு பங்கு செம்போடு ஒரு பங்கு துத்தநாகம் கலந்தால் பித்தளை ஆகும்; அது அழகிய மஞ்சள் நிறமுடையது. அதை உருக்கி வார்ப்பதும் கடைச்சல் பிடிப்பதும் சுலபமாக இருக்கிறபடியாலும், அது நல்ல மெருகு ஏற்றுக் கொள்ளுகிறபடியாலும், தத்துவசாஸ்திர உபகரணங்களைச் செய்வதற்கு அதிக உபயோகமாக இருக்கிறது. போஜனபாத்திரங்களும் தவலை, கொப்பரை, குத்துவிளக்கு முதலியவைகளும் பித்தளையினால் செய்யப்படுகின்றன. பித்தளைசெம்பைப் போல அவ்வளவு சீக்கிரத்தில் களிம்பு பிடிக்காமற்போனபோதிலும், போஜனபதார்த்தங்களைப் பித்தளைப்பாத்திரங்களில் சமைக்கக்கூடாது. வெள்ளீயம் பூசினால் சமையல் செய்யலாம்.

### வெண்கலம்.

5. செம்பும் வெள்ளீயமும் கலந்தால் வெண்கலமாகிறது; கொஞ்சம்துத்தநாகமும்சேர்ப்பதுண்டு.வெண்கலத்தில்களிம் பேறுது. ஆகையால் அது போஜனபாத்திரங்கள் செய்யவும் பிரதிமைகள் வார்க்கவும் உதவுகிறது. நாலுபங்கு செம்பும் ஒரு பங்கு வெள்ளீயமும் சேர்ந்தால் அதிக நாதமுள்ள வெண்கலமாகும். அதனுல் மணிகள் செய்யப்படும். வெண் கலம் மிகக் கடினமானபடியால் அடித்து வேண்டியபடி உரு வாக்க உதவாது; உருக்கித்தான் அச்சுக்களில் வார்க்க வேண்டும்.



## 15. சர்க்கரை.



1. சர்க்கரை, சாதாரணமாய்க் கருப்பஞ்சாற்றினின்றும் செய்யப்பட்ட ஓர்இனிப்பான வஸ்து. இந்துதேசத்தில் ஈந்து, பனே இவற்றின் சாற்றினின்றும் சர்க்கரைசெய்யப்படுகிறது. கரும்பு ஒருவகைப் புல். அது உயரத்திலும், கணுக் களின் அமைப்பிலும் பலவகைப்படும். அது உயரத்தில் பத்தடிமுதல் இருபதடிவரையிலும் வளரும். கரும்பு ஆதி யில் சீனதேசத்திலிருந்து வந்ததாகச் சொல்லுகிருர்கள். அமெரிக்கா கண்டுபிடிக்கப்பட்டவுடனே அதில் கரும்புபயிர் செய்யவாரம்பித்து, அதிசீக்கிரத்தில் விர்த்தியாக்கி எங்கும் பரவுவித்ததினுல், இப்போது அக்கண்டத்திலும் மேற்கு இந்திய தீவுகளிலும் உண்டாகும் சர்க்கரை, பூவுலகில் நாக ரிகமடைந்திருக்கும் தேசங்களுக்கெல்லாம் போதுமானதாக விருக்கின்றது.

2. கரும்பு பயிர்செய்யும் வகை கருப்பங்கழியைத் துண்டு துண்டாக வெட்டிப் பூமியில் நடுவதுதான். வருஷாவருஷம் வெவ்வேறு துண்டுகள் நடவேண்டியதில்லை; பதினைந்து இருபது வருஷம்வரையில் அக்கருப்பம்பயிர்களின் அடியிலிருந்து புதுக் கரும்புக் கன்றுகள் முளைக்கும்.



3. கரும்புப்பயிர் நன்றாய் விளைந்தவுடனே, பூமிமட்டத்திற்கு அதன் கோல்களை வெட்டி, வேண்டியபடி அக்கோல்களைத் துண்டுதுண்டாக நறுக்கி ஆலைக்குக் கொண்டு போவார்கள். கரும்பாலை மூன்று இருப்புருளைகளாற் செய்யப்பட்டிருக்கும். அவ்வுருளைகளுக்கிடையில் கருப்பந்துண்டுகளைக் கொடுத்தால் அவற்றிலுள்ள சாற்றைப் பிழிந்துவிடும்.

4. கருப்பஞ்சாறு தொட்டியில் விழுந்தவுடனே அதைக் காய்ச்சும் பாத்திரங்களிற் கொண்டுபோய்ச்சேர்க்கவேண்டும் அப்படிச் சேர்க்கத் தாமதப்பட்டால் அச்சாறு புளித்துக்கெட்

டுப்போகும். அந்த விரசத்திலுள்ள அழுக்கையெல்லாம் நீக்கும் பொருட்டுச் சிறிதுசுண்ணும்பு நீற்றுச் சலமாவது, உவர்நீராவது அதிற் சேர்ப்பார்கள். அழுக்கெல்லாம் மேலே வந்தவுடனே அதை யெடுத்துவிட்டு, இரசத்தைக் கூடியவரையில் சீக்கிரமாகக் காய்ச்சினுல், அதிலுள்ள ஜலம் சுண்டி ஆவியாயெழும்பிப்போகும். இறுகிவரும்பாகை ஆழமின்றி அகன்றிருக்கும் பாத்திரங்களில் ஊற்றிவைத்தால் அது குளிர்ந்து சர்க்கரையாகும். இது பழுப்புச் சர்க்கரையாக விருக்கும்

5. இந்துதேசத்தில் பெரும்பாலும் மேற்கண்டமுறையாகத்தான் சர்க்கரை செய்வார்கள்; ஆனுல் ஆலைகள் நாணயமற்றிருப்பதனுல் சரக்கும் பரும்படியாயிருக்கும். இவ்விடத்தில் உபயோகப்படுத்திவரும் ஆலைகளில் ஒருவித ஆலை எண்ணெயாட்டும் செக்குப்போலிருக்கும். கரும்பை ஆலையிலாட்டிச் சாற்றைப் பிழிந்தெடுத்து வாய் அகன்ற பாத்திரங்களில் காய்ச்சி, மேலே யெழும் அழுக்கை யெடுத்துவிட்டு, சாறு கட்டியாகக் காய்ந்தவுடனே மட்பாத்திரங்களில் ஊற்றி ஆறவைப்பார்கள். அது ஆறி இறுகினுல் வெல்லமாகும். அதை மறுபடியும் காய்ச்சிச் சுத்திசெய்து சர்க்கரை செய்கிறவர்களுக்குப் பாத்திரங்களில் இறுகியிருக்கிறபடியே விற்பார்கள்.

6. முற்காலத்தில் சர்க்கரையைச் சுத்திசெய்யும்பொருட்டு, பழுப்புச் சர்க்கரையை முட்டையிலுள்ள வெள்ளைக்கரு, மாட்டினிரத்தம் முதலானவைகளோடு சேர்த்துக்காய்ச்சினுர்கள். இப்போது வேறே விசேஷித்த வகையை அனுசரிக்கிறுர்கள். பழுப்புச் சர்க்கரையை முதலில் வெந்நீரில்கரைத்துச் சுண்ணும்பு நீற்று ஜலம் சிறிது சேர்த்து, பல மடிப்

புள்ள வஸ்திரத்தில் வடிகட்டுகிறார்கள். இதனால் பெரும்பாலும் அழுக்கெல்லாம்போய்த் தெளிவாகும்; ஆயினும் கொஞ்சம் மலினமிருக்கும். அம்மலினமும் நீங்கும் பொருட்டு, எலும்பை இருப்புப் பாத்திரங்களில் இட்டுமூடிச் சுட்டுக் கரியாக்கி, அக்கரியின்பேரில் அந்தச் சர்க்கரைத்தண்ணீரை விட்டால், அதிலுள்ள மலினமெல்லாம் அவ்வெலும்புக்கரியில் ஒட்டிக்கொண்டு, மலினமின்றி ஜலம்வெளியே வரும். அதன்பிறகு அச்சலத்தைக் காய்ச்சி இருப்பு அச்சுக்களில் விட்டால் குளிர்ந்தவுடனே இறுகிவெள்ளைச் சர்க்கரையாகும்.

7. வடசர்க்காரிலுள்ள பீமன்பட்டணம், அசிகா, இராஜமஹேந்திரவரம் ஆகிய இவ்விடங்களிலும், மைசூர்நாட்டு அஷ்டகிராமத்திலும் ஐரோப்பியர் விசாரணைக்குட்பட்ட பெரிய சர்க்கரைச்சாலைகள் உண்டு.

8. இந்துதேசத்திலும் சீனதேசத்திலும் சர்க்கரையைச் சுத்திபண்ணிச் செய்வது கற்கண்டு ஒன்றுதான். உயர்ந்த கற்கண்டு சீனதேசத்தில் செய்யப்பட்டு மிகுதியாக ஏற்றுமதி செய்யப்படுகிறது. கயிற்றையாவது சிறு குச்சுகளையாவது அச்சுகளில் வைத்து அவைகளில் சர்க்கரைப்பாகை விட்டால் அது சிறுகச் சிறுக ஆறிப் பளிங்குபோல் கட்டிப்போகிறது. கற்கண்டுக்கட்டிகள் பல உருவங்களாயும், கடினமாயும், தெளிவாயும் இருக்கும்.

9. சர்க்கரை தேகத்திற்குப் புஷ்டிதரத்தக்கது. அதிகமாக வெளுத்துப் பளிங்குபோலத் தெளிவாயிருக்கும் சர்க்கரையைவிடப் பழுப்புச் சர்க்கரை தேகத்தைப் போஷிக்கும் தன்மையுடையது. மாமிசபதார்த்தங்களும் சாகபதார்த்தங்களும் சர்க்கரைப்பாகில் வைத்திருந்தால் கெட்டுப்போகாமல் இருக்கும். அதற்காகவே வற்றல் ஊறுகாய் முதலானவை

களுக்குச் சர்க்கரைப்பாகு சேர்க்கிறார்கள். ஔஷதங்களும் அவ்வாறு சர்க்கரைப்பாகில் வைத்துக் கெட்டுப்போகாமல் காப்பாற்றப்படுகின்றன.

## 16. இரும்பு.



1. இரும்பானது நீலநிறத்தோடு கலந்த கறுத்த ஓர் உலோகம். அது எல்லா உலோகங்களிலும் மிக்க உறுதியும் உபயோகமுள்ளது மாயிருப்பதுமல்லாமல் அதிகமாக அகப்படவும் கூடியது. அது ஜலத்தைவிட எட்டு மடங்கு கனமுள்ளது. அது தகரமும் துத்தநாகமுமொழிந்த மற்றெல்லா உலோகங்களைப்பார்க்கிலும் இலேசானது; நயப்பில்

பொன் ஒன்றுக்குமாத்திரம் இரண்டாவது. சிகிமுகிக் கல்லில் தட்டினல் நெருப்பை உண்டாக்கத்தக்கதும், காந்தத்தினல் கவரப்படக்கூடியதும், காந்தத்தின் குணத்தை அடையத்தக்கதும் இந்த உலோகம் ஒன்றுதான்.

2. இரும்பு பூமியில் எங்கும் விஸ்தாரமாய் அகப்படும். இங்கிலாந்தில் அதிகமாக உண்டாகிறது. இங்கிலாந்துக்குள்ள செல்வப் பெருக்குக்குக் காரணமாகின்றவை முக்கியமாக் அத்தேசத்தில் அபரிமிதமாய் அகப்படும் இரும்பும் நிலக்கரியுமே. ஸ்வீடன் தேசத்தில் உற்பத்தியாகும் இரும்பு மிகவும் சிறந்தது. இங்கிலாந்தில் மாத்திரமே ஒவ்வொருவருஷத்



திலும் ஏறக்குறைய நாற்பத்தைந்து இலக்ஷம் பார இரும்பு எடுக்கிறார்கள். அது கனிகளிலிருந்து எடுக்கப்படும்போது மற்றப் பொருள்களோடு கலந்து கட்டிகளாகவிருக்கும். மலையருவி பாயுமிடங்களில் மணல்களாகவும் கிடைக்கும்.

3. இருப்புக்கட்டியிலிருந்து சுத்த இரும்பைப் பிரித்தெடுக்கும் பொருட்டு, கட்டியைப் பொடியாக்கி, அதனோடு கொஞ்சம் சுண்ணும்பும் கரியும் சேர்த்து, அதை உலேயில் போட்டு, அதிகமாக அனல்மூட்டி எரிப்பார்கள். அதனோடு கலந்துள்ள, மண், கல் முதலியவற்றைப்பார்க்கிலும் இரும்பு பளுவானதனுல், அவ்விரும்பு கரியுடன் கலந்து உருகி அடியில் இறங்கும் ; அதிற் சேர்ந்திருந்த வஸ்துக்களெல்லாம் உருகியிருக்கும் இரும்பின்மேலே மிதக்கும். பின்பு உலேயின் அடியில் ஒரு துவாரம் உண்டாக்கி அதன் வழியாக உருகிய இரும்பை அச்சுகளில் ஓடவிடுவார்கள். இந்த இரும்பு கரியோடு கலந்திருப்பதனுல் இதற்குத் தண்டவாளமென்று பேர். இந்தத் தண்டவாளம் மிக்க வெட்டையாதலால் சுத்தியால் அடிக்க உதவாது. அதை வேறுவிதமாக மறுபடி காய்ச்சினுல், அதிற் கலந்திருக்கும் கரி நீங்கிச் சுத்த இரும்பு ஆகும்.

4. நூறுபங்கு இரும்புக்கு ஒன்று அல்லது ஒன்றரைப் பங்கு கரி சேர்த்து எஃகு செய்யப்படுகிறது ; இவ்வளவிற்கு அதிகமாகக் கரி சேர்ந்தால் தண்டவாளமாகிறது. எஃகு இரண்டுவிதமாகச் செய்யப்படும் ; சுத்த இரும்போடு கரி சேர்ப்பது ஒன்று ; மற்ருென்று கரி அதிகமாகச் சேர்ந்திருக்கும் தண்டவாளத்திலிருந்து மிகுதியாயுள்ள அக்கரியை நீக்கிவிடுவது. முற்கூறிய விதத்தினுலுண்டாக்கும் எஃகுதான் சிறந்தது. எஃகைச் சிவக்கக் காய்ச்சிக் குளிர்ந்த நீரில் தோய்த்தால் மிகவும் கடினமாயிருக்கும். அப்படித் தோய்க்காமல் தானுய்க் குளிரும்படி விட்டுவிட்டால் அதிக நயப்பாகிறது. முன் சொன்னவண்ணம் வெட்டையாயுள்ள எஃகு கத்தி, உளி, அரம், ஊசி முதலிய பெரியவும் சிறியவுமாகிய பலவித ஆயுதங்கள் செய்வதற்கு உதவும்.

5. காந்தமென்பது ஒருவகை இரும்பு. அது பூமியில் பல இடங்களில் அகப்படுகிறது; முக்கியமாய் ஸ்வீடனிலும் அமெரிக்காக்கண்டத்தின் பல இடங்களிலும் அகப்படும். அதற்கு இரும்பின் சிறு துண்டுகளைக் கவர்கிற சக்தி யுண்டு. ஒவ்வொரு காந்தத் துண்டையும் ஒரு கயிற்றில் கட்டித் தொங்கவிட்டாலும், அல்லது நடுவில் ஒரு ஊசியின்மேல் நிற்கவைத்தாலும், அதன் இரண்டு முனைகளில் ஒன்று எப்போதும் வடக்கு முகமாகவும், மற்றொன்று எப்போதும் தெற்கு முகமாகவும் திரும்பும். இவ்விரு முனைகளுக்கும் வடமுனையென்றும் தென்முனையென்றும் பேர். அவற்றில் ஒரு முனையை ஒருவிதமாக ஓர் உருக்குக் கம்பியின்மீது தேய்த்தால், அக்காந்தத்தின் குணம் அவ்வுருக்குக் கம்பிக்கும் உண்டாய், அதுவும் காந்தத்தைப்போல இரும்புப் பொடிகளை ஆகருஷிக்கும். இவ்வாறு காந்தத்தின் குணத்தைப் பெற்ற உருக்குக் கம்பிகளால் திசையறிகருவிகள் செய்யப்படுகின்றன. அவை வழியறிந்துகொள்ளக்கூடாத பெருங் கடல்களில் யாத்திரைசெய்யும் கப்பற்காரர்களுக்கு அதிக உபயோகமாக இருக்கின்றன.

6. ஒவ்வொருகாலத்தில் ஆகாசத்திலிருந்து பூமியின்மேல் விழும் கற்களும் ஒருவகை இரும்பே. அவைகளிற் சில மிகப் பெரியனவாயிருக்கும். சில முந்நூறிராத்தலுக்கதிக மான கனமுடையவை. இவை எங்கிருந்து விழுகின்றனவோ அந்த விஷயம் திருப்திகரமாகத் தெரியவில்லை.

7. இரும்பினுடைய பிரயோசனங்களையெல்லாம் விவரிக்க முடியாது. அது எல்லாத் தொழில்களுக்கும் தத்துவசாஸ்திரக் கருவிகளுக்கும் உபயோகப்படுகிறது. சிறு ஊசியும் மிகவும் பளுவுள்ள பல வண்டிகளை யிழுத்துக்கொண்டு

நெருப்புப் பொறிகளையும் மேகம்போன்ற புகைத்திரளையும் கக்கிக்கொண்டு சட்டங்களின்மீது ஓடும் பெரிய இருப்புக்குதிரையும் அதனுல்தான் செய்யப்படுகின்றன. விவசாயத்துக்கு வேண்டும் கொழு, அரிவாள்முதலிய கருவிகளும், யுத்தத்திற்கு உரிய பட்டாக்கத்திகள், பீரங்கிகள், குண்டுகள் முதலான உபகரணங்களும் அதனுற் செய்யப்படும். ஊசி, வாள், சம்மட்டிமுதலிய ஆயுதங்களும், கடியார வில்லுகளும், வண்டிவில்லுகளும், சங்கிலி, நங்கூரம் முதலானவைகளும் அதனுலேயே செய்கிருர்கள். கைத்தொழில்களுக்கு வேண்டிய இயந்திரங்கள் முதலான யாவும் அதனுலேதான் செய்யப்படுகின்றன. இரும்பு ஔஷதத்திற்கும் விசேஷமாக உபயோகப்படுகின்றது.



## 17. அந்திரோகிலிசும் சிங்கமும்.



1. கிரீசு தேசத்தில் கார்த்தேஜ் என்னும் பட்டணத்தில் அந்திரோகிலிசு என்னும் ஓர் அடிமை இருந்தான். அவனுடைய எசமானன் அவனை அதிகக் குரூரமாய் நடத்திவந்தான். அந்த அடிமை தனக்கு நேரிட்டிருந்த உபத்திரவங்களுக்கு முடிவில்லையென்று கண்டு பரிதபித்து, "ஐயோ, இந்தக் கொடிய எசமானனிடத்திலிருந்து நாள்தோறும் வருத்தப்பட்டுக் கண்ணீர் விடுவதைப்பார்க்கிலும் குத்திக்கொண்டு இறந்தால்தான் என்ன ? இவனை விட்டுத் தப்பியோடி ஆயுள்பரியந்தம் அகப்படாதிருக்கக்கூடுமாஞல் அதனிலும் நல்லதுதான்; ஒருவேளை திரும்பக் கண்டுபிடித்தால் என்னை மிகக் கொடுமையாய் வதைசெய்வானே; இதற்கு என்ன உபாயம் ? நல்லது,

ஒன்று செய்வேன் ; துஷ்டமிருகங்கள் சஞ்சரிக்கின்ற வனங் களுக்குப் போய்நாள் கழிப்பேன் ; அவைகள் என்னைக் கொன்றாலும் கொல்லட்டும்; கொடிய மனுஷர் எனக்குச்செய் கின்ற உபத்திரவங்களைப்பார்க்கிலும் துஷ்ட மிருகங்கள் அதிக உபத்திரவம்செய்யுமா?'' என்று தனக்குள் ஆலோசித் துப் புலம்பிச் சமயம்பார்த்து ஒருவருக்கும் தெரியாமல் தன் எசமானனுடைய வீட்டிலிருந்து காட்டுக்கு ஓடிப்போனான்.

2. வருத்தம் நீங்கிச் சுகம்பெறுவதற்காக வனத்திற்குப் போயும், அங்கே வேறுவிதமான வருத்தங்கள் உண்டாயின. அவன் ஒரு பகல் முழுதும் அந்தக் காட்டில் அங்கும் இங் கும் அலைந்து திரிந்து திசை தெரியாமல் மயங்கினான். அவன் சரீரம் முள்ளுகளால் கீறுண்டு இரத்தமோடியது. அவன் பசியினால் சோர்ந்து நடக்கச் சக்தியில்லாதவனா யிருக்கையில் ஒரு பெரிய குகையைக் கண்டு, அதற்குள் புகுந்து படுத்துக்கொண்டான். உடனே இடி முழக்கம் போன்ற பயங்கரமான சத்தத்தைக் கேட்டு அவன் திடுக் கிட்டு எழுந்து, இதில் ஏதோ துஷ்டமிருகம் இருக்கிறது, இங்கே யிருந்தால் அபாயம் நேரிடும், ஓடித் தப்பி உயிர் பிழைக்க வகை பார்க்கவேண்டும், என்று நினைத்துக் குகையினின்றும் வெளிப்பட்டான். அப்பொழுது ஒரு சிங்கம் அவனுக்கு எதிரேவந்தது. அதைக் கண்ட வுடனே அவன் இனி மீட்சியில்லை, சிங்கத்திற்கு இரையா வது நிசம் என்று எண்ணிக் கலங்கினான். அவன் கால்கள் நடுங்கின ; கைகள் சோர்ந்தன ; மெய் வெயர்த்தது ; அவன் ஒரு மரம்போல் விறைத்து நின்றான். சிங்கமோ சிறி தும் ஆக்கிரகியாமல் மெல்ல நொண்டி நொண்டி நடந்து

அவனுக்குச் சமீபத்தில் போய், தனக்கு உதவிசெய்யும்படி அவனை வேண்டிக்கொள்ளுகிற பாவனையாய் அழுது, தன் முன்னங்காலொன்றை யெடுத்து அவன் முழங்காலின்மேல் வைத்தது.

3. இயற்கையாய் வீரமும் துணிவுமுள்ளவனாகிய அந்திரோகிலிசு, சிங்கத்தின் காலைப் பிடித்துப்பார்த்தான்; காலில் ஒரு பெரிய முள் ஏறி, வீங்கியிருந்தது. சிங்கம் தன்வாலை ஆட்டித் தன் உபத்திரவத்தைத்தீர்க்கும்படி அவனைவேண்டிக் கொள்ளுகிற விதமாய் நின்றது. அவன் அந்த முள்ளைப் பிடுங்கிச் சீயையும் பிதுக்கினான். உடனே சிங்கத்தின் உபத்திரவம் நீங்கிற்று.

4. அதனால் சிங்கம் அதிகமாய்ச் சந்தோஷித்து ஒருநாயைப் போலப் பாய்ந்து துள்ளி விளையாடித் தனது பெரிய வாலை ஆட்டித் தனக்கு உபகாரம் செய்தவன் கைகளையும் கால்களையும் நக்கிற்று. அதுமுதல் அந்தச் சிங்கம் தான் அகப்படுத்திய இரைகளைக் குகைக்குக் கொண்டுபோய், ஒரு பாகத்தை அந்திரோகிலிசுக்குக் கொடுத்து மற்றப் பாகத்தைத் தான் தின்று வந்தது.

5. இந்த நிலைமையில் அந்திரோகிலிசு சில மாதவரையில் இருந்தான். பின்பு ஒருநாள் அவன் காட்டில் அசாக்கிரதையாக உலாவித் திரிகையில் அவனைத் தேடிப் பிடிக்கும்படி அனுப்பப்பட்ட சில யுத்தவீரர்கள் அவனைக் கண்டு பிடித்து எசமானனிடத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். அவனை விசாரணை செய்ததின்மேல் அவன் குற்றவாளியென்று தீர்க்கப்பட்டு, அத்தேசத்தில் அடிமைகளைக் குறித்து ஏற்படுத்தப்பட்டிருக்கும் அதிக குரூரமான சட்டங்களின்படி, மிகுந்த பசியோடிருக்கும் ஒரு சிங்கத்திற்கு

இளையாக விடும்படி அவனுக்குத் தண்டனை விதிக்கப்பட்டது.

6. அந்திரோகிலிசை இவ்வாறு தண்டிக்கும்படி குறிக்கப்பட்டதினத்தில், அவன் ஒரு பகிரங்கமான அரங்கத்திற்குக் கொண்டுபோகப்பட்டான். மிகவும் விசாலமாயிருந்த அந்த அரங்கத்திற்கு மத்தியில் அந்திரோகிலிசு நின்றான். அந்தப் பயங்கரமும் துக்ககரமுமான காட்சியைப் பார்க்கும்படி திரளான ஜனங்கள் நான்கு புறத்திலும் கூடியிருந்தார்கள். அவ்வேளையில் ஒரு பெரிய சிங்கம் அறையிலிருந்து வெளிப்பட்டது. அதன் கண்கள் சுவாலிக்கும் அக்கினிபோல் எரிய, அது கர்ச்சித்து, தன் வாயைத் திறந்துகொண்டு வெளிப்பட்டது. அதைப் பார்த்தவர்கள் எல்லாரும் திடுக்கிட்டு நடுங்கினார்கள். சிங்கமோ அந்திரோகிலிசைக் கண்டவுடனே பணிந்து அவனுடைய பாதத்தண்டை விழுந்து படுத்து ஒரு நாய் தன்னை வளர்த்தவனிடத்தில் நேசம் காட்டுவதுபோல் அன்பு பாராட்டிற்று. தன் அன்பான குழந்தையை இழந்துபோன தாயானவள் அதைத் திரும்பவும் சடிதியில் கண்டால் அவளுக்கு உண்டாகும் சந்தோஷத்தைக்குறித்துச் சொல்லவேண்டுமோ? அதுபோல் அந்தச் சிங்கமும் அந்திரோகிலிசைக் கண்டு அதிகமாய்ச் சந்தோஷித்தது. அந்திரோகிலிசு சிங்கத்தால் சின்னபின்னமாக்கப்படப்போகிறானென்று எதிர்பார்த்திருந்த ஜனங்கள் எல்லாரும் இதைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள்.

7. பின்பு நகராதிபதி அந்திரோகிலிசைக் கூவி அழைத்து "இந்தக்கொடிய மிருகம் ஒரு க்ஷணத்திற்குள்ளாக ஓர் ஆட்டுக்குட்டியைப்போலச் சாதுவாய்விட்டதே அதற்குக் காரணம் என்ன? தெரியும்படி சொல்லு" என்று ஆக்கியாபித்தான்.

8. அப்போது அந்திரோகிலிசு தான் காட்டிற்குப் போனதையும் அவ்விடத்தில் நடந்த சங்கதிகளையும் சொல்லி, அந்தச் சிங்கந்தான் இப்போது தன்னருகில் இருப்பது என்று தெரிவித்தான். கேட்ட யாவரும் உக்கிரமுள்ள துஷ்டமிருகமும் சாதுவாகி, மனுஷனைப்போலச் செய்ந்நன்றியறிகிறதேயென்று ஆச்சரியபபட்டுச் சந்தோஷித்தார்கள். பிறகு அவர்கள் மனுப்பண்ணிக்கொண்டபிரகாரம் நகராதிபன் அந்திரோகிலிசைத் தண்டியாமல் விடுதலைசெய்ததுமன்றி, இரண்டுமுறை அவன் பிராணனைக் காத்த சிங்கத்தை அவனுக்கே வெகுமதியாகவும் கொடுத்தான்.



## 18. ஈயம், தகரம், துத்தநாகம், இரசம்.



### ஈயம்.

1. ஈயமானது சாம்பல்வர்ணமான ஒருலோகம். அது ஜலத்தைப் பார்க்கிலும் பதினொருமடங்கு கனமுள்ளது. வெட்டினவுடனே அது அதிகப் பளபளப்பாக விருக்கும்; காற்றுப்பட்ட சிறிது பொழுதுக்குள் நிறம் மங்கிப்போம். இது உலோகங்களிலெல்லாம் அதிக மிருதுவானதாகையால், எளிதில் சுத்தியினால் அடித்துத் தகடாக்கக்கூடும். அதைக் கத்தியினாலும், சுலபமாக வெட்டலாம். விரலால் அதைத் தேய்த்தால் விரலில் அழுக்குப் படியும். உலோகங்களில் ஈயமும் தகரமும் சற்று அனல் காட்டினால் உருகும். மற்றவைகளோ சிவக்கக் காய்ந்தபிறகு உருகும்; இவ்விரண்டும் மாத்திரம் சிவக்கக்காயாமலே உருகிப்போம். ஈயம் கனிகளிலிருந்து வெட்டியெடுக்கப்படும். அப்படி யெடுக்கப்படும்

போது அது சாதாரணமாகப் பல வஸ்துக்களோடு கலப்புற்றிருக்கிறது; அதனோடு கலந்துள்ள பொருள்களில் முக்கியமானது கந்தகம்; ஒவ்வோரிடங்களிற் கொஞ்சம் வெள்ளியுங் கலந்திருக்கும்.

2. ஈயம் ஸ்பெயினிலும் இங்கிலாந்திலும் ஐக்கியமாகாணங்களிலுமுள்ள கனிகளில் வெட்டியெடுக்கப்படுகிறது. ஐரோப்பாக் கண்டமுழுவதும் உபயோகப்படுகிற ஈயத்தில் சுமார் ஒருபாதி ஸ்பெயின் தேசத்திலுண்டாவது. ஈயத்தினால் நீர்க்குழாய்கள் முதலிய பல கருவிகளும், சாமான்களும், இரவைகளும், குண்டுகளும் செய்கிறார்கள். இரவைகள் உருண்டையாவதற்காகச் சிறிது பாஷாணஞ் சேர்க்கப்படும். பாஷாணங் கலந்த ஈயத்தை உருக்கிச் சல்லடைக்கண் போன்ற சிறு துவாரங்களையுடைய தட்டுக்களில் வார்க்க, அது உயரத்திலிருந்து விழும்போது ஆறி இறுகி இரவைகளாய் விழும். அச்செழுத்துக்கள் வார்ப்பதற்கு நாலு பங்கு ஈயத்துக்கு ஒருபங்கு நிமிளை ஆண்டிமொனி கூட்டுவார்கள்.

3. ஈயத்தில் புளிப்புப் பட்டால் களிம்பு பிடிக்கும். ஈயக்களிம்பு விஷத்தன்மையுள்ளது. ஈயத்தினால் உண்டாக்கும் நீறு வர்ணங்களில் மிகுதியும் உபயோகப்படுகின்றது. அது ஔஷதங்களுக்கும் உதவும்.

## தகரம்.

4. தகரமானது வெள்ளியைப்போல மிக்க வெளுப்பு நிறமுள்ள ஒருலோகம். அது ஜலத்திலும் ஏழுமடங்கு கனமானது. அதனை வெள்ளீயமென்றும் சொல்வார்கள். கடைகளில் விற்கிற வெள்ளீயத்தில் கொஞ்சந்தான் ஈயம் கலந்திருக்கும். தகரத்தில் களிம்பு ஏறாது. அது அதிக மெதுவுள்ள வஸ்துவானபடியால் தனியே அதைக்கொண்டு

பாத்திரம் முதலியவைகள் செய்கிறதில்லை. அதனோடு ஈயத்தையாவது துத்தநாகத்தையாவது கலந்து பாத்திரங்கள் செய்வார்கள். அதனுடைய முக்கியப்பிரயோசனம் செம்பு, பித்தளை, இரும்பு ஆகிய இவைகளாற் செய்யப்படும் பாத்திரங்கள் களிம்பு பிடிக்காமலிருக்கும்படி மேற்பூச்சுப் பூச உதவுவதுதான். அதைச் செம்போடு கலந்தால் வெண்கலமாகின்றது. சுத்தத்தகரத்தை உருக்கி அதில் அச்சமாயடிக்கப்பட்ட இருப்புத் தகடுகளைத் தோய்ப்பார்கள். இத்தகடுகளைத்தான் சாதாரணமாகத் தகரமென்று சொல்கிறோம். இத்தகடுகளால் சோடுதவலைகள், பெட்டிகள், இலாந்தர்கள் முதலிய அநேக சாமான்கள் செய்யப்படும். இத்தகடுகளின்மீது ஒட்டி இருக்கும் தகரம் தேய்ந்தாவது உதிர்ந்தாவது போனால் உள்ளேயிருக்கும் இருப்புத்தகடு வெளிப்படும். முகம்பார்க்கும் கண்ணாடி களுக்குப் பின்னால் இரசம்போடுவதற்கு அச்சமான தகரத்தகடு உபயோகப்படுகிறது. கண்ணாடியளவிற்குச் சரியான தகட்டை ஒரு சமமான பலகையின்மேல் வைத்து, அதில் இரசத்தை வார்த்து அதின்மேல் கண்ணாடியைவைத்தால், சிறிது பொழுதிற்குள் இரசம் தகரத்தோடுகலந்து இறுகிப் போகும்.

5. தகரம் இங்கிலாந்து, ஸ்பெயின், சுமித்திராத்தீவையடுத்த பான்கா, மலேயா, ஆஸ்திரேலியா இப்பிரதேசங்களிலுள்ள கனிகளிலிருந்து மிகுதியாக எடுக்கப்படும்.

### துத்தநாகம்.

6. துத்தநாகம் சிறிது நீலநிறத்தோடு கூடிய வெண்மையான ஒருலோகம்; அது ஈயத்தைவிடச் சற்று ஒளியுள்ளது. அது கடினமாயிருப்பதுமல்லாமல் சுத்தியினால் அடித்தால் நீளத்தக்கதேயன்றி ஒடிவதன்று. அது ஜலத்திலும் ஏழுமட

ங்கு கனமானது. அது அமெரிக்காவில் ஐக்கிய மாகாணங்களிலும், ஐரோப்பாவில் இங்கிலாந்திலும் உள்ள கனிகளில் மிகுதியாக வெட்டியெடுக்கப்படும். அது எளிதில் களிம்பேறாத உலோகமாதலால் போஜன பதார்த்தங்கள் வைப்பதற்குரிய பாத்திரங்கள் அதனால் செய்யப்படுகின்றன. அதைத் தகடுகளாக்கிக் கூரைகள் முதலிய பல வேலைகளுக்கு உபயோகப்படுத்துகிறார்கள். துத்தநாகம்செம் போடுசேர்ந்து பித்தளையாகிறது.

### இரசம்.

7. இரசம் என்பது வெண்ணிறமுள்ள ஒருலோகம். அது ஜலத்திலும் பதின்மூன்றரை மடங்கு கனமானது. சாதாரணமாய் மற்ற உலோகங்களெல்லாம் இறுகிக் கடினமாக இருக்கும்போது அது திரவரூபமாகவே இருக்கும். அது இறுகுவதற்கு மிக்க குளிர்ச்சிவேண்டும். அதை நெருப்பிற் காய்ச்சினால் புகைந்துபோம். கனிகளில் அது கந்தகத்தோடு சேர்ந்து ஜாதிலிங்கமாக அகப்படுகிறது. அதிகப் பிரசித்தமான இரசக் கனிகள் ஸ்பெயினிலும் ஆஸ்திரியாவிலு மிருக்கின்றன. இரசம் சீனத்திலும் ஜப்பானிலும் மிகுதியும் எடுக்கப்படும். இந்த உலோகம் பொன், வெள்ளி, ஈயம், தகரம், துத்தநாகம் இவைகளோடு அதி சுலபமாகக் கலக்கிறது. அது முகம்பார்க்கும் கண்ணாடிகளுக்குப் பின்புறத்தில் பூசுவதற்கு உபயோகப்படுகிறதுமல்லாமல், காற்றின் நிலைமையையும் சீதோஷ்ணங்களின் அளவையும் தெரிவிக்கும் கருவிகளைச் செய்யவும் உபயோகப்படுகிறது. அது இன்னும் வேறு தொழில்களுக்கும் உதவும்.



## 19. சுகம் பாதுகாக்கு முறை.



1. தேகசௌக்கியம் அருமையான பேறு. வியாதியி னால் சௌக்கியத்தை யிழந்தாலல்லாமல் அதின் அருமை நன்றாய்த் தெரியாது. ஆனபடியினாலே நாம் சௌக்கியத்தை யடைவதற்கும் அடைந்தபிறகு அதைக் காப்பாற்றுகிறதற் கும் தகுந்த முயற்சி செய்யவேண்டும். சாதாரணமாக அசௌக்கியம் அசாக்கிரதையினாலாவது அவிவேகத்தினாலா வது உண்டாகும். நன்றாய்த் தேகசவுக்கியத்தை யனுபவிக்க வேண்டுமானால், காற்று, ஆகாரம், சுத்தம், தேகப்பயிற்சி இவற்றைக் கவனிக்கவேண்டும்.

2. தேகசௌக்கியத்திற்குச் சுத்தமான காற்று அத்தியா வசியகமாக விருக்கின்றது. நாம் சுவாசிக்கும்போது உட் கொள்ளும் வாயுவுக்கும் வெளியே விடும் வாயுவுக்கும் பேத முண்டு. பிராணாதாரமான வாயு நாம் சுவாசிக்கும் வாயுவி லிருக்கிறது. நாம் இரண்டொரு விசை சுவாசித்த வாயுவில் ஒரு விளக்கை வைத்தால் அது அணைந்துபோகும். ஆகை யால்,முக்கியமாய் நாம் நித்திரைசெய்யும் அறையிலும், ஜனங் கள் அடர்ந்திருக்கும் அறையிலும், வேண்டியவளாயில் சுத் தமான காற்றுவரும்படிச் செய்வது மிகவும் அவசியம்.

3. சௌக்கியமடைவதற்கு முக்கியமானவற்றுள் மற் றொன்று சரியான ஆகாரம். பழுக்காத காய்கள் நெய்ப்பசை யுள்ள வஸ்துக்கள் முதலான சில பதார்த்தங்கள் சுலபமாக ஜீரணமாகிறதில்லை. இத்தேசத்தில் எளிய ஜனங்கள் காலையில் பழைய சாதத்தைப் பெரும்பாலும் சாப்பிடுகிறார்கள் ; அது

நல்லதன்று; முக்கியமாய் ஏதாவது கொள்ளைநோய் உண்டாயிருக்கும்போது அது வியாதிக்கிடங்கொடுக்கும். சாப்பாட்டு விஷயத்தில் கவனித்து நடப்பது சௌக்கியத்தைக் காப்பாற்றிக்கொள்ளும் உபாயங்களில் ஒன்று. சௌக்கியத்தை இழந்தகாலத்திலும் அவ்வுபாயத்தால் அதை வருவித்துக்கொள்ளலாம்.

4 சுத்தஜலமும் சுகத்திற்கு அத்தியாவசியகமானது. ஒருவிசை ஒரு சாலகத்தின் ஜலம் கீழே சுவறி ஒரு கிணற்றிற் போய் விழுந்தது. அக்கிணற்றின் ஜலத்தைப் பானம்பண்ணி வந்த அநேக குடும்பத்தார்கள் வியாதிஸ்தரானார்கள். இந்து தேசத்தில் சாதாரணமாகக் கிணற்றருகில் வஸ்திரங்களை வெளுக்கிறார்கள்; அசுத்தமான வஸ்துக்களை யதிற் போடுகிறார்கள்; அதனால் கிணற்றுச் சலம் கெட்டுப்போகிறது.

5. சுத்தமாயிருத்தல் சௌக்கியத்தையடைவதற்கு அவசியமான அம்சங்களில் மூன்றாவதாயிருக்கிறது. ஸ்நானஞ் செய்வதும் வஸ்திரங்களைக் கிரமமாகக்களைந்து வேறு ஆடைகளை உடுப்பதும் மனிதருடைய சருமத்தை வியாதியடையாமற் காப்பாற்றும். அப்படிச் செய்யாததினால்தான் சிரங்கு முதலாகிய சரும வியாதிகள் உண்டாகின்றன. ஜலத்தையெடுத்து மேலே விட்டுக்கொள்வதினாலேயே சருமத்தின்மேலுள்ள அழுக்கு நிவிர்த்தியாகாது; சரீரத்தை ஒரு கம்பளித் துணியினாலாவது அல்லது முரட்டு வஸ்திரத்தினாலாவது அழுத்தித் தேய்க்கவேண்டும்.

6. மிதமான தேகப்பயிற்சியும் சௌக்கியத்திற்கு இன்றியமையாதவற்றுள் ஒன்று. சோம்பலினாலாவது கெட்ட பழக்கத்தினாலாவது மனிதர்கள் தேகப்பயிற்சி செய்யாமற்

போனுல், அவர்கள் சோர்வடைந்து நோயாளிகளாயிருப்பதுமல்லாமல், ஏதாவது ஒரு சுவல்ப காரியஞ்செய்ய முயன்ருலும் அது அவர்களுக்கு அதிக பாரமாகத் தோன்றும்; அப்படிப்பட்டவர்கள் தாங்கள் கஷ்டப்படுகிறதுமல்லாமல் மற்றவர்களுக்கும் பிரயோசன மற்றவர்களாவார்கள். மனிதர்களாற்செய்யப்படும் எவ்வித இயந்திரமும் அசைவற்றிருந்தால் துருப்பிடித்துக் கெட்டுப்போகிறதையும் ஓடிக்கொண்டிருந்தால் நன்ருயிருக்கிறதையும் காண்கிருேம். அதுபோலவே சரீரம் சௌக்கியமாக இருக்கவேண்டுமானுல் சலித்துக்கொண்டிருக்கவேண்டும். சிறுவர்கள் செய்யவேண்டிய தேகப்பயிற்சிகளில் முக்கியமானவை ஓடுதல், விரைவாய் நடத்தல், பந்து விளையாடல் இவைகளே. தேகப்பயிற்சி முக்கியமாய்ச் சிறுவர்களுக்கு அத்தியாவசியகமாக இருக்கிறது. விளையாட்டில் போக்குகிற காலம் வீணுகப்போகிறதென்று நினைத்தல் தப்பிதம். அவ்வாறு கழிக்கிறகாலத்தினுல் அதிக லாபம் உண்டாகும். அதனுல் மனம் வலுவடைந்து, படிப்பதற்கு அதிக உற்சாகங்கொள்ளும்



## 20. சந்திரகாசன் கதை.



1. தென்றேயத்தின்கண் ஒருபுறத்து நெடுந்தூரத்தில் பச்சைக்கர்ப்பூரம் விளையும் கேரளதேசத்தில் ஓரரசன் அரசாட்சி புரிந்துவந்தான். அவன் அதிட்டவீனனாய் மிக்க இடுக்கண்களையே அன்றி இன்பத்தை அனுபவித்தவனல்லன். அவனுக்கு ஒரு புத்திரன் தோன்றினான். அச்செல்வன் பிறந்தகாலையில் கோள்கள் நின்ற நிலையை நோக்கிச் சோதிடர்கள் அவன் அதி சம்பன்னனாவானென்று சொன்னார்கள். அச்சிறுவன் பிறந்த சிலநாள்களுக்குள் "பட்டகாலிலே படும் கெட்ட குடியே கெடும்" என்பதுபோல மிக்க வலியுள்ளோனாகிய பகையரசனொருவன் அந்நாட்டின் மீது படையெடுத்துவந்து, அவ்வரசனையும் அவன் படையையும் வென்று கொலைபுரிந்து தேசத்தையும் பிடித்துக் கொண்டான். அவ்வரசனுடைய பட்டஸ்திரீயும் அக்கால வழக்கின்படி தன்னுயிர்க்கொழுநனோடு உடன்கட்டையேறி மடிந்தாள். இவ்வண்ணம் நடந்ததன்மேல் செவிலித்தாய் அவ் விளங்குழவியை எடுத்துக்கொண்டு கௌந்தலம் என்னும் ஒரு பட்டணத்துக்கு ஓடிப்போய்; அச்சேயின் தாய் தந்தையர்கள் இன்னாரென்று ஒருவருக்கும் தெரிவிக்காமலே, குற்றேவல்செய்து தானுஞ் சீவித்து அவ்விளம் பிள்ளையையும் பாதுகாத்துவந்தாள். அப்படி மூன்று வருஷகாலஞ் சென்றபிறகு அச்செவிலி அம்மகவை நிராதாரமாக விட்டுக் காலகதியால் இறந்தாள்.

2. அவ்வெளிய சிறுவன் ஆதரிப்பாரின்றிப் பகற்பொழுதில் தெருக்கடோறும் அலைந்துதிரிந்து, கண்டோர் யாவராயினும் மனமிரங்கி இடும் உணவை அருந்தி, இரவில் ஓர் ஆலயத்

திற்குட்போய்ப் படுத்துறங்குவான். இவ்வண்ணம் வளர்ந்து நாலைந்து வயதானவுடனே தன்னோடொத்த பருவச்சிறுர்களோடு சேர்ந்து விளையாடப்போவான். அப்பிள்ளைகள் அவனைத் தங்கள் வீடுகளுக்கு எப்போதாவது உடன்கொண்டு போவதுண்டு. அச்சிறுவர்களுடைய தாய்மார்கள் இக்குழந்தைக்குத்தாய் தந்தையர் உறவினர் ஒருவருமில்லையென்று பிறர் கூறக் கேட்டதுமுதல் "ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்" என்பதைக் கடைப்பிடித்து இரக்கமுற்று, அவனிடத்தில் அன்புபாராட்டி, அவனுக்குத் தலைமுழுக்குச் செய்விப்பவரும், ஆடையீவாரும், உண்டியளிப்பவருமாயினுர்கள்.

3. அவ்வாறுநடந்து வருங்காலையில், ஒருநாள் அச்சிறுவன் அந்நகர வேந்தனுடைய அமைச்சன் மனைக்குப் போயினுன். அப்போது அம்மாளிகையில் பல முனிவர்களும், சோதிட நூல் வல்லவர்களும் வந்திருந்தார்கள். அவர்களில் சாமுத்திரிகாலக்ஷணங்களை யறிந்த சிலர் இப்பிள்ளையை உற்றுப் பார்த்து "இவன் யார்? இவன் முகத்தில் அரசனுக்குள்ள குறிகள் காணப்படுகின்றன" என்று ஒருவரோ டொருவர் பேசிக்கொண்டார்கள். அவர்களில் ஒருவரும் இவனை இன்னுனென்றுணர்ந்திலர்; அஃதறிந்துகொள்ளும்படி இச்சிறுவன் யாவனென்று அவர்கள் மந்திரியை வினுவ, அவன் "என் வீட்டுக்கருகே சிறுவர் பலர் வந்து விளையாடுகிருர்கள், அவர்களில் இவன் ஒருவன்; இவன் இன்னுனென்று யானறியமாட்டேன்" என்றனன். அதைக் கேள்வியுற்ற உறுப்பிலக்கண நூலறிஞர்கள் "இச்சிறுவனிடத்தில் அரசர்க்கிருக்குங்குறிகள் பல தோன்றுகின்றமையினுல் இவன் ஒருகாலத்தில் இந்நாட்டரசனுவா னென்பதற்கு ஐயமே யில்லை; நம் பரிவாரத்திற்கும் நம் சொத்துக்களுக்கும் இனி இவன் தலைவனுவான்" என்றுர்கள்.

4. அதைக்கேட்ட மந்திரி தனக்குள் எழுந்த பொறாமையையும் அச்சத்தையும் புறந்தோன்றாமல் அடக்கிக்கொண்டு, அம்முனிவர்களையும் சோதிடர்களையும் உபசரித்துவிடைகொடுத்தனுப்பிவிட்டு, அவர்கள் கூறிய மொழிகளைக் குறித்துத் தன்னுள் ஆராய்வானாயினன். துறவிகளும் சோதிடப் புலவர்களும் யாதொருபொருளையும் குற்றமற ஆராய்ந்து துணியாமல் புறத்தே சொல்லுகின்றவர்களல்லர்; அவர்கள் கூறியவற்றுள் ஏதோ உண்மை இருத்தல்வேண்டும். வருமுன்னர்க் காத்துக்கொள்வதே அறிவுடையான் செயல்; ஆதலால் இச்சிறுவனால் நமக்கு யாதொரு தீங்கும் நேராதபடி நாம் முன் முயல்வதே தகுதி என்று யோசித்து, அவனைக் கொல்வதே நலமெனத் துணிந்து, தன்பாலுள்ள கொலைஞரை அழைத்து இச்சிறுவனை இன்றையிரவில் ஒருவரும் பாராதபடி கொண்டுபோய்க் காட்டில் கொல்லுமின் எனக் கட்டளையிட்டனன். அமைச்சனுடைய ஏவலைத் தலைமேற்றாங்கிக் கொலையாளர் அக்கோமகனைக் காட்டிற்கு மெல்லென நடத்திச்சென்று, வாளை யுறையினின்றும் உருவி வீசமுயல்கையில் அப்பாலகன் அதைக்கண்டு நடுநடுங்கி, கண்ணீர்வார, நாத்தழும்பேற, ஈசுவரனை நோக்கி "அகதியாகிய என்னைக் காத்தல் நினது கடன்" எனப் பிரார்த்தித்தனன். அருட்கடலாகிய கடவுள் அம்முறையைக் கேட்டு அக்கொலையாளிகளுடைய மனத்தை மாற்றவும், உடனே அவர்கள் உள்ளங்குழைந்து, அவனைக் கொலைசெய்ய மனமெழாமல், மந்திரியானவன் குற்றம் யாதுமில்லாத இச்சிறுவனைக் கொன்றதற்கடையாளமாக இவ்விளைஞன் உறுப்புக்களிலேதேனுமொன்றைத் துணித்துக் கொண்டுவந்து காட்டச்சொல்லியிருக்கின்றனே, அதற்கென்ன செய்வோமென்று தம்முள் யோசித்து, அவனுடைய அவயவங்களைச் சோதிக்கையில் அவன் பாதங்களொன்றில் ஆறு விரற்களிருக்கக் கண்டு கவலையொழிந்து

ஆறாவது விரலை நறுக்கிக் கொண்டுபோய் மந்திரியின் முன் வைத்தார்கள். மந்திரி அதைப் பார்த்துப் பெரு மகிழ்வடைந்து அவர்களில் ஒவ்வொருவனுக்கும் கறவை எருமை ஒவ்வொன்று வெகுமானஞ் செய்தான்.

5. அங்கே காட்டில் விடப்பட்ட சிறுவனோ தனியனாய் அழுதுகொண்டிருக்கையில், மந்திரி ஆணையினால் அங்கங்கே சென்று குடியிறைவாங்கி நீதிசெலுத்துவோனாகிய குளிந்தன் என்போன் அக்காட்டுவழியாகப் போயினன். அவ்வழுகுரலைக்கேட்டு அவ்விடத்திற்கு விரைந்து சென்று, அச்சிறுவன் கால்விரலறுப்புண்டு இரத்தம் பெருகத் தரையில் விழுந்து கிடப்பதைக்கண்டு, அப்பாலகனை அணுகி முகத்தினழகைப் பார்த்தவுடனே தன்னை யறியாத மகிழ்ச்சியடைந்து, தனக்குச் சந்தானமில்லாமையினால் அக்குழந்தையையெடுத்துக்கொண்டு வீட்டுக்குப்போய்த் தன் மனைவி கையிற் கொடுத்து, இருவருமனமொத்து அவனைச்சுவீகாரம்செய்து கொண்டார்கள். அவ்விடத்திலுள்ள சோதிடர்களை வரவழைத்து, அச்சிறுவனைக் காண்பித்தபோது, அவர்கள் இச்சிறுவன் மிக்க பாக்கியவானாவானென்றும் நாளடைவில் ஒரு பெரிய அரசனாவானென்றும் சொல்லியதுமல்லாமல், அவன் நகைக்குங் காலையில் அவன் வதனம் பூரணசந்திரன்போலத் தோன்றுகின்றமையினால் இவனுக்குச் சந்திரகாசனென்னும் பேரமையும் என்றும் சொல்ல, அப்படியே அவனுக்குச் சந்திரகாசனென்று நாமகரணஞ் செய்தார்கள்.

6. அதுமுதல் சந்திரகாசனுடையசுவீகாரத் தந்தை வீட்டில் எக்காரியமும் அநுகூலமாகவே முடிந்துவந்தது. அவன் பசுக்களும் எருமைகளும் முன்னையினும் இரட்டிப்புப் பால் கறந்தன ; அவன் பயிர்கள் பத்துப்பங்கு விளைச்சல் கொடுத்தன. சந்திரகாசனும் சோம்பலின்றி இலக்கிய இலக்கணங்களையே அன்றிப் போர்க்குரிய கலைகளையும் பயின்று பருவ

மடைந்தபோது போர்ப்பிரயாணஞ்செய்ய விருப்பங்கொண்டிருந்தான். அக்காலையில் அந்நாட்டரசனுக்குக் கீழ்ப்பட்ட பல சிற்றரசர்கள் அவனாணைக்கு அடங்கித் திறைகட்டாமல் செருக்குக் கொண்டிருந்தார்கள். அவர்கள்பால் தண்டோபாயத்தைச் செலுத்தி அவர்களிறுமாப்பை அடக்கிவரும்படி அரசன் செய்த கட்டளையை மேற்கொண்டு, அமைச்சன் பலமுறை படையெடுத்துச் சென்றும் அச்சிற்றரசர்கள் போரில் அவனையும் அவன் சேனாவீரர்களையும் புறங்காட்டி யோடும்படி வெற்றிகொண்டார்கள். அதைச் செவியுற்ற சந்திரகாசன் அக்குறுநில மன்னர்கள்மேல் படையெடுத்துப் போய் அவர்களையெல்லாம்கொலைபுரிந்து, அவர்கள் மனைவிமக்களைச் சிறைசெய்து, அவர்கள் ஈட்டிவைத்துள்ள பொருட்குவியலையும் கொள்ளையிட்டுக்கொண்டு மீண்டுவந்தனன்.

7. சந்திரகாசனுடைய வீரியத்தைச் சுவீகாரத் தந்தையாகிய குளிந்தன் கேள்வியுற்று, பெருமகிழ்ச்சியடைந்து, அவன் கொண்டுவந்த திரவியத்தில் ஒரு பாகத்தை எடுத்துக்கொண்டுபோய் மந்திரி முன்வைத்து, தன் புத்திரன் கலகக்காரர்களை வெற்றிகொண்டு பெரும்பொருளைக் கொணர்ந்த செய்தியைத்தெரிவித்தனன். அதைக்கேட்டு மந்திரியும் மிகுந்தகளிப்போடு அந்நிதியில் சிறிதெடுத்துப்போய் வேந்தன் முன்னர் வைத்து, “என் கீழதிகாரிகளில் ஒருவனைக் கலகப்பட்டிருந்த நாடுகளுக்குச் செலவிடுத்தேன். அவன் அக்குறுநிலத்தலைவர்களை முற்றும் வென்று அன்னோருயிரைக் கூற்றுவனுக்கு இரையாக்கி, அவர்களது நிதிச்சாலையிலுள்ள பொருட்களையெல்லாம் கொள்ளையாடிக்கொண்டு வந்தான்” என்று கூறினான். அரசன், உன் கீழதிகாரிகளில் இவ்வளவு காரியஞ் செய்தவன் யாவன்? பலமுறை என் படைகளையெல்லாந் திரட்டிக்கொண்டு நீயே சென்றும் அக்குறும்பர்களை அடக்க உன்னால் இயலாமற்போயிற்றே? நின்னினும் வெற்றியாளனு

யுள்ளவன் யாவன் ? என்று வியந்தான். அஃதுணர்ந்து மந்திரி ஐயனே! இதுவரையும் நான் அச்சிற்றரசர்களால் அடிக்கடி தோல்வியடைந்தது எனக்கே அதிக அவமானமாகத் தோன்றுகின்றது. இப்போதுதான் கடவுள் எனக்கு நேர்ந்துள்ள அவமானத்தை நீக்கியருளினுர் என்றுன். அரசன் நீ சொன்னது தகுமென உடன்பட்டு அமைச்சனை மெச்சிப் பெருமை பாராட்டினதுமன்றி, போரில் வென்றுவந்த நாடுகளையும் அவனுக்குக் கொடுத்துவிட்டான். மந்திரியும் மனமகிழ்ந்து தன் மனைக்கு வந்து தனக்குப் பெருஞ் சிறப்பை அடைவித்த தன் கீழதிகாரியைத் தான் புகழ்ந்து தனக்கு அரசன் அளித்த நாடுகளிற்சிலவற்றை அவனுக்குக்கொடுத்தான். சந்திரகாசன் தன் தந்தையினுடைய பட்டணத்தில் பல குளங்களை வெட்டி, வழிப்போக்கர்கள் தங்குவதற்கு அநேக சத்திரங்களையும் கட்டுவித்தான். அக்காரணமாகப் பலர் அந்நாடு நீர்வளமுள்ளதென வந்து குடியேறி இனிது வாழத் தலைப்பட்டமையினுல், அப்பட்டணமும் குடிவளமுள்ளதாகி நன்றெனப் பேர்பெற்றது. தன்னுட்டில் குடிவாரம் மிகுதியும் வரத்தொடங்கினமையினுல், முன்னெல்லாம் அரசனுக்குப் பதினுயிரமும், அரசன் மனைவிமார்களுக்கு ஐயாயிரமும், மந்திரிக்கு ஐயாயிரமும் ஆக இருபதினுயிரம் பொன் பகுதிகட்டிவந்த குளிந்தன், இப்போது பெரும் பொருளுடையான் ஆயினமையினுலே அதற்கெழுமடங்கு அதிகமாகப் பகுதிகட்டத் தொடங்கினுன்.

8. மந்திரி, தன்னுல் ஒடுக்கக்கூடாத பகைஞர்களையெல்லாம் முற்றுங் களைந்து, கட்டிவரும் பகுதியினும் ஏழத்தனை அதிகமாய்க் கட்ட உடன்பட்ட குளிந்தனைப்பற்றி அழுக்காறடைந்து தன் மந்திரித்தொழிலை மதனன் என்னுந் தன் மகனிடத்தில் ஒப்புவித்து, தன் கீழதிகாரியின் மனைக்குப் போய் அவனடைந்திருக்கும் எண்ணிறந்த செல்வத்தைத் தன் கண்

ளுல் நேரிற் பார்த்து, அதற்குக் காரணம் இன்னதென்று தெரிந்துகொள்வதன்பொருட்டு, அவன் வாழும் பதிக்குச் செல்லத் தனக்குள் தீர்மானித்தான்.

9. பிரயாணமாய்ப் புறப்படுகையில் மணத்துக்குத் தகுந்த பருவமடைந்துள்ள விஷை என்னும் அவன் செல்வப்புத்திரி அவன்முன் வந்து நின்று, தான் மணத்தின்மேல் கொண்ட காதலைத் தன் பிதாவுக்கு வெளிப்படுத்தும் வகையறியாமல் நாணித் தலைகுனிந்துகொண்டு, சுபகாரியமொன்று நடத்த எனக்கு விருப்பமிருக்கிறதென்றாள். மந்திரி கடுகிச் செல்லுமுயற்சியால் தன் அருங்குமாரத்தி குறிப்பிட்டதை இன்னதென உணர்ந்துகொள்ளாமல், அவ்வண்ணமே விரைவில் நடத்தப்படுமென்று சொல்லிவிட்டுச் சென்றனன். விஷையும் தன் தந்தை தன்னை விரைவில் திருமணம் புணர்த்துவதாகச் சொன்னாரெனக்கருதி மிகவுங் களித்திருந்தனள்.

10. அமைச்சன் அந்நாட்டை விட்டுக் குளிந்தனுடைய ஊரையடைந்து அவனது இல்லின்கண் சென்றகாலையில், அவ்வதிகாரியும் எதிர்கொண்டுபோய், அச்சமும் அன்பும் பாராட்டி அவனுக்குத் தகுந்த வழிபாடுசெய்து, தன் வசதிக்குள் அழைத்துக்கொண்டுபோயினன். மந்திரி அவ்விடத்தில் வீற்றிருந்து, கணக்கில்லாத செல்வத்தைக் கண்ணுற்று, இப்பெருஞ்செல்வம் நினக்குக் கிடைத்தது யாதினாலென வினவுதலும், குளிந்தன் விடைதருவானாயினன். ஐயனே! யான் காட்டுவழியாகச் செல்லுகையில், ஒரு சிறுவன் கால் விரல்களில் ஆறுவது விரல் நறுக்குண்டு, இரத்தம்வடிய வாய்விட்டலறிக்கொண்டு கிடந்தான்; அவனை யான் எடுத்து வந்து சுவீகாரஞ் செய்துகொண்டேன்; அதுமுதல் எனக்குப் பலவகைச் சம்பத்துக்கள் உண்டாயின; என்று கூறினன். அது செவியேற்ற மந்திரி அதிகவியப்புற்று ஆராயத்தொடங்கினன். இச்சிறுவன் நாம் சிலநாட்களுக்குமுன் கொலைஞர்

வசம் ஒப்புவித்த சிறுவனேயென்றும், அக்கொலையாளர் அவனைக் கோறல்செய்யாமல் விட்டுக் கால்விரல் ஒன்றைமட்டும் துணித்துவந்து நமக்குக்காட்டி வஞ்சித்தாரென்றும் ஆராய்ந்து தேறி, அக்கொலையாளர்மீது கடுஞ் சினங்கொண்டனன். அச்சினத்தை ஒருவாறு தனக்குள் தணித்துக்கொண்டு, எதிரில் நின்ற சந்திரகாசனை நோக்கி, ஓகோ இவன் நம் மகன் மதனனைப்பார்க்கிலும் சிறந்தவனாக விருக்கின்றான்; இவன் முகம் முழுமதிபோல் விளங்குகின்றது; சௌந்தரியத்திலும் மகிமையிலும் தெய்வக்கூறுடையான்போலத் தோன்றுகின்றான்; கௌந்தலராஜனே மூப்புடையான்; அவனுக்கு ஆண்மகப்பேறில்லை; ஒரே பெண் மகளுண்டு; நம் அருஞ்செல்வமைந்தனாகிய மதனன் அவ்வரசன் மகளை மணம்புரிந்து, அந்நாட்டை ஆளுகைசெய்வானென் றெண்ணியிருக்கிறோம்; இச்சந்திரகாசன் அவன் கண்ணெதிர்ப்படுவானாயின், அரசன் மதனனை அவமதிசெய்து, சந்திரகாசன்மேல் அவாக்கொண்டு அவனை மேன்மேலுயர்த்துவா னென்பதற்கு ஐயமேயில்லை; என்றிவ்வகை பலவாறு கருதி, சந்திரகாசன்மேற் பொறாமைகொண்டான்.

11. மந்திரி தான் கொண்ட அழுக்காறு காரணமாக மிகத் துன்பமடைந்தும், அத்துன்பம் வெளியே தோற்றாதவண்ணம் உள்ளம் மகிழ்பவன்போல நடித்து, அடியில் வருமாறு தன் குமாரனான மதனனுக்கு ஒரு கடிதம் வரைந்து, அதைச் சந்திரகாசனிடத்திற் கொடுத்துத் தனது உறைவிடமாகிய கௌந்தலபதிக்குக் கொண்டுபோகச் சொல்லினன். கடிதம் வருமாறு :—

12. "என் சுபுத்திரனான சிரஞ்சீவி மதனனுக்குச் சகல பாக்கியங்களுமுண்டாகுக. இக்கடிதங் கொண்டுவருகிறசந்திரகாசன் என் சத்துரு; அவனுக்கென்பொருட்களை யெல்லாம் கவர்ந்துகொள்ள விருப்புளது. ஆதலால் அவனுடைய

யௌவனத்தையேனும் முகவிலாசத்தையேனும் பாராட்டாமலும், அவன் யாருடைய குமாரன், கனவானு, கற்றவனு, சதுரனு என்னுந்திறங்களில் ஒன்றையேனும் எண்ணுமலும் அவனுக்கு விஷங்கொடுக்க.''

13. சந்திரகாசன் அமைச்சன் கொடுத்த திருமுகத்தைக் களிப்போடேற்றுக்கொண்டு ஒரு குதிரையின்மீதேறிச் செல்லாநிற்கப் பல சுபசகுனங்கள் தோன்றின. மனையைவிட்டு வெளியில் வருகையில், ஆடவனொருவன் புதுமணஞ்செய்து கொண்டு, சங்கு, முரசு, குழல்முதலிய மங்கலவாத்தியமுழங்கத் தன் மனையாளோடு தன் இல்லத்துக்கேகக் கண்டனன். அங்கு நின்று சிறிதாறு கடக்கையில் அப்போதுதான் ஈன்ற கன்றையும் அதன் தாயையும் தன் குடிலுக்கு ஓட்டிச்செல்கின்ற இடையனொருவனைக் கண்டனன். இவ்வண்ணஞ் சென்று கௌந்தலநகரத்தை நெருங்கி, அந்நகரத்துக்குப் புறத்தே அழகிய ஒரு பூஞ்சோலையைக் கண்டு, தன் விடாயைத் தணித்துக்கொள்ள அத்தோட்டத்திற்குட்சென்று, ஒரு மரநிழலில் தன் குதிரையைக் கட்டித்தானும் படுத்துத்துயின்றனன்.

14. அச்சோலையோ தன்னுள் நுழைந்தோர் வெயிலை விரும்பத்தகுந்த குளிர்ச்சியுள்ளது. அது மந்திரியின் சோலை. அந்நாட்காலையில்மந்திரியின்செல்வப்புத்திரி விஷையும், அரசனது செல்வமகள் சண்பகமாலினியும் தங்கள் தங்கள் தோழியர்களோடுஅப்பூஞ்சோலையின்கண் வந்து பொழுதுபோக்காகவிளையாடிக்கொண்டிருந்தார்கள். விஷை மலர்களைப்பறித்துத் தன் மடியில் வைத்துக்கொண்டுவந்து, அரசனது திருமகண்மீது தூவி, நீ விரைவில்தகுந்த கொழுநனைத் திருமணம் புணர்ந்து பாக்கியசாலியாய் வாழக்கடவையென்றுள். அரையன் மகள் விஷையை நோக்கி, உன் முகத்தில் இப்பொழுதுதோன்றும் நற்குறியை ஆராயின், நீ இன்றைக்கே கட்டழகமைந்த கணவ

ஞெருவனை மணம்புணர்வாயென என்னெஞ்சில் தட்டுப்படு கின்றதென்றனள். இவ்வாறு ஒருவர்க்கொருவர் கலியாணச் செய்தியைப்பற்றி பரிகாசஞ் செய்துகொண்டிருந்தார்கள்.

15. இக்கன்னியர்கள் ஒருவரை யொருவர் பரிகாசஞ் செய்துகொண்டு பூந்தோட்டத்தில் நாலுபக்கங்களிலும் உல்லாசமாக உலாவாநிற்கையில், விஷை மற்றவர்களை விட்டுப் பிரிந்து சந்திரகாசன் துயின்றுகொண்டிருந்த பொய்கையின் கரைக்குத் தனித்துச் சென்றனள். ஆங்கு முழுமதி போன்ற அவன் முகத்தினழகு அக்கன்னிகையினுள்ளத்தை முற்றும் கவர்ந்தமையினால்,அவனுக்கருகில் போய்ப்பார்த்து, அவன் மடியில் ஒரு கடிதமிருக்கக்கண்டு அதனை உற்றுநோக்கத் தொடங்கினள். அது தன் உடன்பிறந்தானுக்குக் கொடுக்கப்படவேண்டியதென்றும், தன்னையீன்றோன் கையெழுத்தென்றும் தெரியவந்தது. தன் தந்தை பயணப்பட்டுப்போகும்போது தனக்கு அதிவிரைவில் மணம் முடிப்பதாகக் கூறியதைக் கருதிக்கொண்டு,சந்திரகாசனுடைய மடியிலிருந்து அக்கடிதத்தை மெல்லென எடுத்துப் பிரித்து முழுதும் படித்துப் பார்த்தனள். "சந்திரகாசன் என் சத்துரு," "அவனுக்கு விஷங்கொடு" என்பதை இரண்டொரு முறை திருப்பித் திருப்பி, வாசித்து, மிகுதியும் துன்புற்று, அவன்மீதிரக்கங் கொண்டு, "சத்துரு" என்னும் மொழியை "மித்துரு" எனவும் "விஷங்கொடு" என்பதை "விஷையைக் கொடு" எனவும் எளிதில் திருத்தித் தன்பாலுள்ள தன் பிதாவின் இலச்சினையைப் பொறித்து, அக்கடிதத்தை மீளவும் அவன்மடியிலேயே வைத்து விட்டுப்போய், மற்றைக்கன்னியர் ஆடிக்கொண்டிருந்த இடத்துக் கூடினாள். கூரறிவுடையாளாகிய அரசன் புதல்வி அவளைக்கண்டவுடனே, விஷையே, உன் முகத்தைக் குறிப்பாக நோக்கின் நீ யோராடவனைக் கண்டு அவன்மேல் காதற் கொண்டனையெனக் குறிப்பிக்கின்றதென்றாள். விஷை

புன்னகைசெய்து வேறு காரியத்தைப்பற்றிப் பேசி அதை மறக்கடித்தாள்.

16. இவர்கள் இங்ஙனமிருக்க, ஆங்கு சந்திரகாசன் துயிலுணர்ந்தெழுந்து குதிரையேறி அமைச்சன் மாளிகையைத் தேடிச்சென்று, மந்திரிகுமாரனாகிய மதனன்கையில் திருமுகத்தை கொடுத்தான். மதனன், அக்கடிதத்தைப் படித்து மிகுதியும் வியப்படைந்தான். தந்தையினுடைய கட்டளையோ மிகக்கண்டிப்பாயிருக்கிறது; அவனுடைய யௌவனம், அழகு, கண்ணியம், கல்வி, திறமை முதலியவற்றைக்குறித்து யாதொன்றும் ஆராயாமலே விஷையை அவனுக்குக் கொடு என்றிருக்கிறது; ஆதலால் காலதாமதம் செய்யாமல் விவாகத்தை நிறைவேற்ற வேண்டுமெனக் கருதி, ஜோதிஷர்களை வருவித்து நாள்பார்க்கும்படி சொல்லினன். அவர்கள் அற்றைத்தினமே சூரியாஸ்தமயத்திற் சிறந்த முகூர்த்தமிருக்கிறதென்று சொன்னார்கள். உடனே மதனன் விவாகத்திற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்யும்படி அங்குள்ளவர்களுக்கு உத்தரவுசெய்தனன். விஷையும் தன் பிதா வந்துவிடின் மணத்துக்கு இடையூறு நேருமென்றஞ்சி மணக்கோலம் புரிந்தாள். சந்திரகாசனோ சௌந்தரியவதியாகிய மந்திரிகுமாரத்தியை மணம்புரியும்பொருட்டு மணக்கோலங்கொள்ளும்படி சொன்னபோது பிரமித்து ஒன்றுந் தோன்றாமல் சொன்னவண்ணமே செய்தனன்.

17. தன் தகப்பன் கட்டளையை அதிஜாக்கிரதையாகக் காலநீடிக்காமல் நிறைவேற்றினதாகத் தெரிவிக்கவேண்டுமென்னுமெண்ணங் கொண்டமையால், சூரியாஸ்தமனமாவதற்குள் திருமணத்துக்குரிய யாவும் ஆயத்தமாயின. தன் சகோதரியையும் சந்திரகாசனையும் கரம்பற்றி இட்டுக்கொண்டுபோய்ப் பலவகை மணிகளிழைத்த திருமணையில் உட்காருவித்தான். புரோகித வந்தணர்கள் தம்பதிகளுடைய தந்தையர்

பேர்களையும் பாட்டன்மார் பேர்களையும் தொன்றுதொட்டு வருமுறையாகக் கேட்டார்கள். சந்திரகாசனை நின் தகப்பன் பேரையும் பாட்டன் பேரையும் கூறவேண்டுமென்று வினவியதற்கு, அவன் எல்லாம் வல்ல முதற்கடவுளே என் தந்தையும் பாட்டனும்; அவனை யன்றி வேறு தாய்தந்தைகளையாயினும் பாட்டனையாயினும் நானறியேன் என்றான். மந்திரிகுமாரன் அவ்விஷயத்தில் தன் தகப்பனுடைய உத்தரவைக் கருதி, புன்னகைசெய்து, பௌரோகிதர்களை யாதொன்றும் வினவாமலே விவாகச்சடங்கு நடத்தும்படி பணித்தனன். அவ்வாறே பௌரோகிதர்களும் மாங்கல்லியதாரணஞ்செய்வித்துக் கலியாணத்தை நிறைவேற்றினார்கள். உடனே மதனன் கலியாணத்திற்கு வந்திருக்குமவர்களுக்குப் பச்சைக் கர்ப்பூரம்சேர்ந்த சந்தனம், நறுமலர்மாலை, தாம்பூலாதிகளைக் கொடுத்து அளவில்லாப் பொன்கள், சிறந்த அணிகள், பொன்னுடைகள், பரிகள், கரிகள் முதலியவற்றை வேதியர்கள், பாவலர்கள், இசைவல்லோர்கள் மற்றும் கலியாணத்துக்கு வந்திருந்த எல்லோருக்கும் தானஞ்செய்தான். இச்செய்தி நகரமுற்றும் பரவித் தெருக்கள்தோறும் அங்கங்கே மாந்தர்கள் கூடி இவ்விவாகத்தைப்பற்றித் தம்மில் பேசிக்கொண்டு தம்பதிகளை வாழ்த்தினார்கள்.

18. இங்ஙனம் இவண் நிகழ்கையில் குளிந்தனுடைய பட்டணத்திலிருந்த அமைச்சன் சந்திரகாசனைத் தன் குமாரனிடத்திற்கு அனுப்பினவுடனே அச்சந்திரகாசனை வளர்த்த குளிந்தன்மீது கோபங்கொண்டு, அவனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் சிறைச்சாலையில் அடைத்து, அவனதிகாரத்தையும் பொருள்களையும் வேறொருவனுக்குக் கொடுத்துவிட்டதுமல்லாமல் குளிந்தன் கீழ்க் குடிகளையெல்லாம் அடித்து மிக்க கொடுமைசெய்தான். இவ்வாறமைச்சன் குளிந்தன் மேற்கொண்ட அழுக்காற்றினால் அவனையுங் கெடுத்து, அவ

னுடைய சுவீகாரபுத்திரனுகிய சந்திரகாசனையுங் கொலைசெய் வித்தோமென மனமகிழ்ச்சியோடு குளிந்தன் பட்டணத்தை விட்டுத் தன் நகரத்துக்கு வருங்காலையில், மேற்கண்டபடி சந்திரகாசனுக்கும் மந்திரி குமாரத்தியாகிய விஷை என்பா வளுக்கும் விவாகம் நடந்துகொண்டிருந்தது. மந்திரி தன் வீட்டுக்கு வரும்போது, உள்ளே சங்கீத வாத்திய ஒலி மிகுதியாயிருந்தது. தானங்கள் வாங்கினவர்கள் கூட்டங் கூட்டமாகத் தங்களுக்குக் கிடைத்தபொருட்களை யெடுத்துக் கொண்டு வீட்டைவிட்டு வெளியே வந்தார்கள். இவர்கள் மந்திரியைக் கண்டவுடனே சந்திரகாசனுக்கும் விஷைக் கும் விவாகம் நிறைவேறினதைப்பற்றி மங்களவாழ்த்துக் கூறினுர்கள். மந்திரி அதைக் கேட்டு அவர்கள் பைத்தியம் பிடித்தவர்களென்று நினைத்து அவர்களை அடித்துத் துரத்தி விடும்படி செய்தான். உடனே மற்றொரு கூட்டத்தார் முன்போலவே மனையைவிட்டுப் புறத்தில் வந்து மந்திரியை வாழ்த்தினுர்கள். அவர்களையும் அவ்வண்ணமே அடித்துத் துரத்தும்படி செய்தான். கடையிற் சில விப்பிரர்களும் அதிகாரிகளும் மணஞ்செய் இல்லத்தினின்று புறம்வந்து மந்திரியைக்கண்டு ஆசீர்வதித்து மங்களங்கூறினுர்கள். அதன் மீது மந்திரி மிக்க சினங்கொண்டு அவர்களையெல்லாம் தானே தன் கையால் அடித்துத் துரத்தினன். அவ்வடி பொறுக்காமையினுல் அவர்களிற் சிலர் தாங்கள் தானமாகப் பெற்ற பொருட்களையெல்லாம் எறிந்துவிட்டு ஓடிப் போனுர்கள் ; சிலர் உடுத்த ஆடைகள் சோர்ந்துபோனதுந் தெரியாமல் பயந்து குப்புறவிழுந் தெழுந்தோடினுர்கள்.

19. மந்திரி மதிமயங்கி ஒன்றுந் தோன்றுமல் வீட்டிற்குள் பிரவேசித்தபோது ஸ்திரீகளெல்லோரும் வந்து அவனைச் சூழ்ந்துகொண்டு மங்கலப்பாட்டுப் பாடினுர்கள். அங்கு சந்திரகாசனும் விஷையும் மணம்புரிந்த கோலத்தோடு ஏகாச

னத்தில் உட்கார்ந்துகொண்டிருக்கக் கண்டவுடனே, மேலெழுந்து பொங்கிய சினத்தோடு மெய்ந்நடுங்க, உரோமம் சிலிர்க்க ஒன்றுஞ் சொல்லத் தோன்றாமல், தன் மகனுக்குப் பைத்தியம்பிடித்திருக்க வேண்டுமென்றெண்ணி, உடனே அவனிருந்த விடத்திற்குப் போய், ஓ! புத்தியீனா! என்ன காரியஞ் செய்தாய்? நான் ஒருவனை உன்னிடம் அனுப்பி அவனுக்கு விஷமிடு என்று திருமுகம் விடுத்தால் நீ அவனுக்கு என் செல்வக்காதலியை மணஞ் செய்வித்து, என் பொருள்களையெல்லாம் வாரி ஜனங்களுக்குத் தானங்கொடுத்து அழித்தனையே என்றான். மதனன் உடனே தன் தகப்பனிடத்திலிருந்து சந்திரகாசன் கொணர்ந்த கடிதத்தை எடுத்து அவன் கையிற் கொடுத்தான். மந்திரி அதை வாசித்துப்பார்த்து; அதில் திருத்தப்பட்டிருந்ததை உணராமலே மதிமயங்கித் தானொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்ததென்றபடி, தான் நினைத்ததற்கு நேர்விரோதமாகத் தானே எழுதியனுப்பினதாக வெண்ணி தன்னைத்தானே வெறுத்துக் கொண்டான்.

20. அதன்மேல் மந்திரியானவன் நிறைவேறிய காரியத்தைப்பற்றிப் போராடினாலும் தன் மருமகனைப்பற்றி இகழ்ந்து நிந்தை கூறினாலும் அறிஞர் பலரும் நகைப்பார்களென்று கருதி, தனக்குள்ளிருந்தவருத்தத்தை வெளியிடாமல் மறைத்துக்கொண்டு, தம்பதிகளிடத்திற்குப் போய் மாப்பிள்ளைக்குச் சில நன்மொழிகளை மொழிந்து தன் அருமைப் புதல்வியை அணைத்து முத்தாடி ஆசிர்வதித்தான். வெளிக்குப்பலர் மெச்சுமாறு இங்ஙனஞ்செய்தும் மந்திரி மனதில் ஆங்கண் உள்ளோரெல்லோரையுங் கொலைபுரியலாமென்று கருதத்தக்கபெருஞ் சினத்தனாயிருந்தான். ஆயினும் தீங்கொன்றும் செய்வதற்கேலாமல் தன் கோபம் புறத்தே தோன்றாது தன்னுளடக்கிக்கொண்டு, அன்றிராத்திரி நடக்கவேண்டிய சடங்குகளை

யெல்லாம் தானுமுடனிருந்து நடத்தினன். அழுக்காறுடையான் யாது தீங்குதான் செய்யத் துணியான்? அந்தோ! இக்கொடியோன் மறுநாள் சூரியோதயமாதலும், சில சண்டாளர்களை வரவழைத்து, அன்னோர்களுக்கு மிகுந்த பரிசுகொடுப்பதாக வாக்குக்கொடுத்து, அவர்களை அந்நகரத்துக்குப் புறம்பேயுள்ள துர்க்கையின் கோயிலினுட்சென்று கரந்துறைந்து, அங்கு அற்றையந்திப்போது பொன்வட்டிலில் அத்தேவிக்கு நிவேதனங் கொண்டுவரும் ஆடவனைக் கொலைசெய்ம்மினெனப்பணித்திட்டான். அதன்பின்னர்ச் சந்திரகாசனை அழைத்துத் தன் மரபினருள் ஒவ்வொருவனும் மணமகனானபின் இந்நகரத்துக்குப் புறம்பிலெழுந்தருளி இருக்கும் துர்க்காதேவிக்குப் பொற்கிண்ணத்தில் நிவேதனங்கொண்டு சென்று சமர்ப்பிப்பது வழக்கமென்று சொல்லவும், இவ்வஞ்சனையறியாத சந்திரகாசன் அன்று சாயங்காலம் அப்படியே செய்கிறேன் என்றான்.

21. மந்திரிகுமாரத்திக்குக் கலியாணமான அன்றிரவில் அரசன் கணக்கண்டு பெரியோர்களை வரவழைத்து அதனைத் தெரிவித்தகாலையில், அவர்கள் நினக்கு விரைவில் மரணம் நேருமென்று சொல்லினார்கள். அஃதன்றியும் அரசன் தன் நிழலைப் பார்க்கையில் அது சிரசில்லாமற் காணப்பட்டது. அப்படி ஒருவனுடைய சாயை தோற்றுமாயின் அங்ஙனந் தோன்றிய ஏழுநாட்களுக்குள் அவன் மரிப்பான் என்று நூற்கள் கூறும். அதனால் அரசன் தன்னரசாட்சியை நீத்து, இனி உயிரோடிருக்கும் சில நாட்களை நற்காரியங்களில் கழிக்க வேண்டுமெனத்துணிந்து, மந்திரி நகரம்வந்து சேர்ந்தசெய்தி தெரியாதவனாய், அவன் குமாரத்திக்குக் கலியாணமான மறுநாள் அமைச்சன் புதல்வனை வரவழைத்து, நான் இற்றைத் தினமே அரசாட்சியை விட்டு விலகவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டேன்; சந்திரகாசனது நற்குண நற்செய்கை

களை நான் கேள்விப்பட்டதில், என்னிராச்சியத்தையாள அவன்தான் தக்கானென எனக்குத் தோன்றுகிறது ; ஆகையி ஞல் இக்கணமே நீ சென்று சந்திரகாசனை அதிவிரைவில் அரண்மனைக்கு அழைத்துக்கொண்டுவா என்று பணித்தான்.

22. மதனனும் தன் மைத்துனன் எய்தும் பெருஞ் சிறப் பைப்பற்றிப் பெருங் களிப்படைந்து, உடனே புறப்பட்டுச் சந்திரகாசனைத் தேடிப்போகும்போது, அவன் பொற்பாத்தி ரத்தில் நிவேதனங்கொண்டு துர்க்காதேவி ஆலயத்திற்குப் போய்க்கொண்டிருந்தான். அவனைக் கண்டு வழிமறித்து அரண்மனைக்குக் காலக்கழிவின்றிப் போகவேண்டிய அவசி யத்தைத் தெரிவித்து, அவனுக்கு மாருக அந்நிவேதனத்தைத் தான் தாங்கிச் சென்று சமர்ப்பிப்பதாகச் சொல்லி அவன் கையிலிருந்த பொற்பாத்திரத்தைத் தான் வாங்கிக்கொண்டு, அவனை அரண்மனைக்கு விரைந்துபோகச் செய்தான். மத னன் அப்பாத்திரத்தைக் கையிலேந்தித்துர்க்காதேவியின் ஆல யத்தை நோக்கித் தனியே செல்லாநிற்கையில் சூரியாஸ்த மனமாய்விட்டது. வழியிற் பல தீக்குறிகள் தோன்றின. ஓர் ஆந்தை அவன் தலைமீது பொருக்கென வந்து உட்கார்ந்தது ; இரண்டு பூனைகள் இவனுக்குக் குறுக்கேபோய் ஒன்றோ டொன்று போர்புரிந்தன. ஒரு காரணமுமின்றி அவன் கண்க ளினின்றும் இரத்த நீர் துளித்தன. இவ்வவசகுனங்களைக் கண்ணுற்று அச்சங்கொண்டு, அவை சந்திரகாசனைக் குறித் துத் தோன்றினவையென்று கருதி, கிடைக்கத்தகாத தன் மைத்துனனுக்கு ஒரு குறைவும்உண்டாகாமலிருக்கவேண் டுமென்றும், ஏதாவது நேரிடுவதாயின் அது அவனுக்குப் பதில் தனக்குச் சம்பவிக்கவேண்டுமெனவும், பிரார்த்தித் துக் கொண்டேபோய்ச் சாமுண்டியின் கோயிலை அடைந்து, கதவைத் திறந்து உள்ளே புகுந்தனன். உடனே அங்கு

கரந்திருந்த கொலையாளர்கள் அவனைத் தங்கள் வாட்களினால் தடிந்துமடித்தார்கள்.

23. அங்கு அரண்மனையை நோக்கிச் சென்ற சந்திரகாசன் பிரதானிகள் முதலாயினோரோடு கொலுவிருக்கும் அரசன் முன்னர்ப் போய் நின்றான். அரசன் தன் மணிமுடியைத் தன் முடியினின்றும் எடுத்துச் சந்திரகாசன் சிரத்தின்மேல் வைத்து, அங்கு முன் நந்தவனத்தில் விஷையோடு விளையாடிக்கொண்டிருந்த சண்பகமாலினியென்னும் தன் குமாரத்தியை வரவழைத்துச் சந்திரகாசனுக்குப் பாணிக்கிரகணஞ் செய்வித்து, தன் பரிவாரங்களை நோக்கி இச்செல்வச் சிறுவனை உங்களுக்கு அரையனாக்கினேன் ; அவனும் நீவிரும் அவனாளுகையின் கீழமைந்த குடிகளும் எல்லீரும் இனிது வாழ்ந் திருப்பீர்களாக என்று வாழ்த்துக் கூறினான். பிரதானி முதலாயினோர் கண்களில் நீர் பெருக, சந்திரகாசனை எங்கள் அரசனாக நாங்கள் நிறை நெஞ்சோடு அங்கீகரிப் போம் என்றார்கள் ; அதன்மீது அரசன் தன் ஆடையாபரணங்களைக் களைந்து சந்திரகாசனுக்குக் கொடுத்துவிட்டுத் தான் உடுத்திருந்த ஓராடையோடு பட்டணத்தை விட்டு அடர்ந்த காட்டிற் புக்கு மறைந்தனன்.

24. புதிய வரசன் பட்டத்துக்கு வந்ததைப் பேரி அறைவித்துப் பட்டணமுழுவதும் அறிவித்தபோது பேதைமையுள்ள மந்திரி கேட்டு, தான் நினைத்திருந்தபடி அரசன் தன் குமாரனாகிய மதனனுக்குப் பட்டங்கட்டிவிட்டுக் காட்டகம் ஏகியிருக்கவேண்டுமென்று நினைத்தான். மந்திரியின் தூதர் அரசன் சந்திரகாசனுக்குப் பட்டங்கட்டிவிட்டுப் போய்விட்டானென்று உண்மையைச் செப்பினார்கள். மந்திரிஅதை நம்பாமல் மிகுதியுஞ் சினங்கொண்டு அங்ஙனம் சொல்வாரது நாவை அறுக்கும்படி நியமித்தனன். அக்காலையில் சந்திரகா

சன் தனக்குளதாய பெருமையெல்லாம் மந்திரியாலுளதான தென்று கருத்துட்கொண்டு, அவனைச் சென்று கண்டு நன்றி பாராட்ட வேண்டுமென்று கருதி, அன்று தான் மணம்புரிந்த அரசன் மகளோடு தேர்மீதேறி, அமைச்சன்மாளிகைக்கு வந்தான். மந்திரியோ தன் குமாரன்தான் அரசு பெற்றுத் தன் ஆசியைப் பெறும்பொருட்டு வருகிறானென்று நினைத்தான். சந்திரகாசன் இரதத்திலிருந்து இறங்கித் தன்முன் நின்ற போது, மந்திரி அதிக கோபங்கொண்டு மெய்ம்மறந்து சற்று நேரம் மரம்போல் விறைத்து நின்றான். உடனே தன் மகன் மதனனை விசாரித்தபோது அவன் சந்திரகாசனுக்குப்பதிலாகத் தங்கப்பாத்திரத்தை யேந்தித் துர்க்காதேவி சன்னிதிக்குப்போனான் என்று சொன்னார்கள். அதைக் கேட்கவும் அலறி விழுந்து ஆலயத்திற்குக் காலால் விரைந்தோடி நோக்குகையில், ஆங்கு, தன் அரும்பெறற் செல்வமைந்தன் வெட்டுண்டு இறந்திருந்ததைக்கண்டனன். கண்டவுடனே வெறிகொண்டவனைப்போல் ஒரு தூணில் தன் தலையை மோதிக்கொண்டு தானும் மடிந்தான்.

("கெடுவான் கேடு நினைப்பான்.")





# நறுந்தொகை.

(சுருக்கம்.)

கல்விக் கழகு கசடற மொழிதல்
செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.
மன்னவர்க் கழகு செங்கோன் முறைமை.
மந்திரிக் கழகு வரும்பொரு ளுரைத்தல்.
அறிஞர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்
வறிஞர்க் கழகு வறுமையிற் செம்மை.
தேம்படு பனையின் றிரள்பழத் தொருவிதை
வானுற வோங்கி வளம்பெற வளரினும்
ஒருவர்க் கிருக்க நிழலா காதே:
தெள்ளிய வாலின் சிறுபழத் தொருவிதை
தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினு மண்ணல் யானை
அணிதேர் புரவி யாட்பெரும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலாகும்மே.
உற்றோ ரெல்லா முறவின ரல்லர்.
அடினுமாவின்பா றன்சுவை குன்றாது:
சுடினுஞ் செம்பொன் றன்னொளி கெடாது.
அரைக்கினுஞ் சந்தனந் தன்மண மறாது:
புகைக்கினுங் காரகில் பொல்லாங்கு கமழாது:
கலக்கினுந் தண்கடல் சேறாகாது:
பெருமையுஞ் சிறுமையுந் தான்றரவருமே.

சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்
பெரியோராயிற் பொறுப்பதுகடனே :
சிறியோர் பெரும்பிழை செய்தன ராயிற்
பெரியோ ரப்பிழை பொறுத்தலு மரிதே.

நூறாண்டு பழகினு மூர்க்கர் கேண்மை
நீர்க்குட் பாசிபோல் வேர்க்கொள் ளாதே:
ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.

கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினுங் கற்கை நன்றே.
கல்லா வொருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதரா கும்மே.

எக்குடி பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை வருகவென்பார்.
அச்சமு நாணமு மறிவிலோர்க் கில்லை

உடைமையும் வறுமையு மொருவழி நில்லா:
குடைநிழ லிருந்து குஞ்சர மூர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினு நண்ணுவர்.

அறத்திடு பிச்சை கூவி யிரப்போர்
அரசோ டிருந்தர சாளினு மாளுவர்.

தறுகண் யானை தான்பெரி தாயினும்
சிறுகண் மூங்கிற் கோற் கஞ்சும்மே.

கொடுங்கோன் மன்னர் வாழு நாட்டிற்
கடும்புலி வாழுங் காடு நன்றே:
சான்றோ ரில்லாத் தொல்பதி யிருத்தலின்
தேன்றேர் குறவர் தேய நன்றே.

முதலுள பண்டங் கொண்டுவா ணிபஞ்செய்
ததன்பய னுண்ணு வணிகரும் பதரே:
வித்து மேரு முளவா யிருப்ப
எய்த்தங் கிருக்கு மேழையும் பதரே.
வாய்ப்பறை யாகவு நாக்கடிப் பாகவும்
சாற்றுவ தொன்றைப் போற்றிக் கேண்மின்,
பொய்யுடை யொருவன் சொல்வன் மையினல்
மெய்போ லும்மே மெய்போ லும்மே:
மெய்யுடை யொருவன் சொலமாட் டாமையால்
பொய்போ லும்மே பொய்போ லும்மே.
பழியா வருவது மொழியா தொழிவது.
துணையோ டல்லது நெடுவழி போகேல்.
வழியே யேகுக வழியே மீளுக.



# முதுமொழிக்காஞ்சி.



(சுருக்கம்)

ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லாம் :
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை :
மேதையிற் சிறந்தன்று கற்றது மறவாமை :
வன்மையிற் சிறந்தன்று வாய்மை யுடைமை :
இளமையிற் சிறந்தன்று மெய்பிணி யின்மை :
நலனுடை மையினு ணுச்சிறந்தன்று :
குலனுடை மையிற் கற்புச் சிறந்தன்று:
கற்றலிற் கற்றாரை வழிபடுதல் சிறந்தன்று:

செற்றாரைச் செறுத்தலிற் றற்செய்கை சிறந்தன்று:
முற்பெருகலிற்பிற் சிறுகாமை சிறந்தன்று.

பேரிற் பிறந்தமை யீரத்தி னறிப:
ஈர முடைமை யீகையி னறிப:
சுற்ற முடைமை காட்சியி னறிப:
ஏற்ற முடைமை யெதிர்கோளி னறிப:
குத்திரஞ் செய்தலிற் கள்வனாத லறிப:
சோற்சொர் வுடைமையி னெச்சோர்வு மறிப:
சீருடை யாண்மை செய்கையி னறிப.

நிறையச் செய்யாக் குறைவினைப் பழியார்:
செய்தக்க நற்கேளிர் செய்யாமை பழியார்:
வறியோன் வள்ளிய னன்மை பழியார்:
சிறியா ரொழுக்கஞ் சிறந்தோரும் பழியார்.

பழியோர் செல்வம் வறுமையிற் றுவ்வாது:
நாணில் வாழ்க்கை பசித்தலிற் றுவ்வாது:
அறிவிலி துணைப்பாடு தனிமையிற் றுவ்வாது:
தானோ ரின்புறல் தனிமையிற் றுவ்வாது.

நீரறிந் தொழுகாதா டார மல்லள்:
தாரமாணா ததுவாழ்க்கை யன்று:
ஈரமல்லாதது கிளைநட்பன்று:
நேரா நெஞ்சத்தோ னட்டோ னல்லன்:
தேராமற் கற்றது கல்வி யன்று.

மக்கட் பேற்றிற் பெரும்பேறில்லை:
நசையிற் பெரியதோர் நல்குர வில்லை:
இரத்த லின்னாங் கிளிவர வில்லை:
இரப்போர்க் கீதலி னெய்துஞ் சிறப்பில்லை.
பேரறிவி னோனினிது வாழாமை பொய்:

கள்ளுண்போன் சோர்வின்மை பொய்:
காலமறியாதோன் கையுறல் பொய்:
சிறுமைமேல் வரவறியா தோன்றற் காத்தல் பொய்:
உறுவினை காய்வோ னுயர்வு வேண்டல் பொய்:
பொருணசை வேட்கையான் முறைசெயல் பொய்.
உறழ்வெய் யோர்க்குறு செரு வெளிது:
குறளை வெய்யோர்க்கு மறைவிரி யெளிது:
உண்டிவெய்யோர்க் குறுபிணி யெளிது.
முறையி லரசனாடு நல்கூர்ந் தன்று:
சொற்செல்லா வழிச்செலவு நல்கூர்ந் தன்று:
அகம்வறியோ னண்ணல் நல்கூர்ந் தன்று:
நட்டில் வழிச்சேற னல்கூர்ந் தன்று.
ஓங்கல் வேண்டுவோ னுயர்மொழி தண்டான்:
கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்:
நிற்றல் வேண்டுவோன் றவஞ்செய றண்டான்:
வாழ்க்கை வேண்டுவோன் சூழ்ச்சி தண்டான்:
மிகுதி வேண்டுவோன் றகுதி தண்டான்:
இன்பம் வேண்டுவோன் றுன்பந் தண்டான்:
துன்பம் வேண்டுவோ னின்பந் தண்டான்:
ஏமம் வேண்டுவோன் முறைசெய றண்டான்.

———

*MADRAS SCHOOL SERIES.*



# THIRD STANDARD READER,

## TAMIL.



# மூன்றும் ஸ்டாண்டர்டு புத்தகம்.



*Authorized by the Director of Public Instruction.*

Second Edition, 10,000 Copies.

Madras:

PUBLISHED BY THE EMPRESS OF INDIA PRESS,
*Popham's Broadway, Black Town.*

1896.



